
PARLE
Parle
BISCUITS

பிரபல எழுத்தாளர்களின்
கதை, கவிதை, கட்டுரைகளுடன்
எண்ணம் கவரும் அதிக
வண்ணப்பக்கங்களில்-

# மங்கை




## பொங்கல் சிறப்பிதழ்

இப்பொழுது விற்பனையாகிறது

திருவானைக்காவல் — அருள்வலம்
சிவசங்கரி — சிறப்புப்பேட்டி
திலகவதி — கவிதைகள்
ராதிகா — மனம் திறந்த பேட்டி

'ஆலயமணியின் ஓசையை நான் கேட்டேன்'

- திருமதி வள்ளியம்மை கண்ணதாசன் எழுதும்
கட்டுரைத் தொடர்

பேஷன் உலகம்

வேத விதைகள் (குறுநாவல்) - லட்சுமி ராஜரத்தினம்

மற்றும் வித்தியாசமான பகுதிகள்

சிறப்புப் பக்கங்களாக-

குழந்தைப் பராமரிப்பில்
'தாயின் கடமைகள்'

100க்கு மேற்பட்ட பக்கங்கள்
விலை ரூ. 8/-

Sunday, Piano, Nursery Rhymes
It's **Morton** for me all the time



# MORTON
SWEETS

*I Love my Sundays ..... Nursery Rhymes and my Mummy close to me and Mortons*
*all the time. It has been our Family's favourite for years and years.*
*Delicious and yummy in so many flavours. All with the goodness of*
*Creamy Milk, Glucose and Sugar.*
*Chocolate and Coconut Cookies, Rose Eclairs, Supreme*
*Chocolate and Coconut Toffees, Lacto Bonbons Mango King*
*and so many other delicious treats.*
*Um m m m m Every bite a yummy delight.*

*A lifetime of real goodness*

**MORTON CONFECTIONERY & MILK PRODUCTS FACTORY**
P.O. : Marhowrah 841 418 Dist. : Saran, Bihar

CC/M-1/93

**Caution Notice :**

MORTON and its wrappers are registered trade mark of Upper Ganges Sugar Industries Ltd. Any infringement of trade mark rights is liable to prosecution.





# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி




## உலக உடன்பிறப்பு உறவு

குஜராத் வித்தியா பீடத்தை நிறுவிய நான்கு ஆண்டுகளுக்குப்பின் மகாத்மா காந்தி 1924ல் அதன் மாணவர்களிடையே அங்கு உரையாற்றினார். அப்போது அவர் அவர்களிடம் ஹிந்து, முஸ்லீம், கிருஸ்துவர், யார்ஸி, யூதர் ஆகியோரைத் தம் உடன்பிறந்தவர்களாகக் கருதும்படி அறிவுறுத்தினார். இந்த உலக உடன்பிறப்பு உறவை செயலாக்கிக் காட்ட வேண்டும் என்று அவர் வலியுறுத்தினார். அம்மாணவர்களுக்கு இதில் நம்பிக்கை இல்லாவிட்டால் அவர்களுக்கு அந்த வித்தியா பீடத்தில் இடம் இல்லை என்று கண்டிப்பாக அவர் கூறினர்.

இதனையே காந்திஜீ தாம் நடத்தி வந்த 'யங் இந்தியா' இதழ்களிலும் எழுதி வந்தார். இளைஞர்கள் தம் மாநிலம், தம் ஊர், தம் வர்க்கம், தம் இனம் என நினையாமல் யாதும் நம் ஊரே, யாவரும் சமமே யாவரும் உடன் பிறப்பே என்று எண்ண வேண்டும் அவர் கூறி வந்தார்.

இது ஒருவன் கற்கும் கல்வியின் அடிப்படையில் உணரப்படுவது. எல்லோரிடமும் எங்கும் எந்த நேரத்திலும் நன்கு பழகச் செய்வதே நற் கல்வி என ஆதி சங்கரர் கூறியுள்ளார். ஆனால் துரதிஷ்டவசமாய் இன்றையக் கல்விமுறை இப்படி இல்லையே!

கல்வி ஒருவனை உயர்த்தி அவனை முழு மனிதனாக்கி பேச்சிலும், எண்ணத்திலும் செயலிலும் உயர்ந்தவனாக்க வேண்டும். இதுவே கல்வி என்பதன் நோக்கம். இதனை அடைவோமாக!


மதிமுகம்: 94 பிப்ரவரி 1994 புன்னகை: 2

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00




# அதிபர் அளித்த வாக்குறுதிகள்



நம் நாட்டின் நண்பரான மாமூன் அப்துல் கய்யூம் சென்ற நவம்பர் 11ந்தேதி மாலத்தீவு அதிபராக நான் காவது முறையாகப் பதவி ஏற்றார். அந்நாட்டின் நாடாளும் மன்றம் அவ ரைப் போட்டியின்றித் தேர்ந் தெடுத்தது. அதனால் தேர்தல் என் பது இல்லாமல் மக்களின் அபிப் பிராயம் மட்டும் கோரப்பட்டது. அக்டோபர் 15ல் நடந்த வாக்குக் கணிப்பில் 93 சத மக்கள் நாடாளும் மன்றம் அவரை அந்நாட்டின் அதிப ராகத் தேர்ந்தெடுத்ததை ஆமோதித் தனர்.

அதற்கு முன் அவரது மைத்துனர் இலிமான் இப்ரஹீம் தான் அப்பத விக்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண் டும் என்பதற்குச் செய்த முயற்சிகள் பலிக்கவில்லை. இப்ரஹீம் மீது பல குற்றச்சாட்டுகள் இருந்தன. அவற் றின் அடிப்படையில் விசாரணை நடந்து தண்டிக்கப்பட்டு 15 வருட காலத்திற்கு நாடு கடத்தப்பட்டார். அதனால் அதிபர் பதவிக்கு கய்யூமைத்தவிர வேறு யாரும் தகுதி பெற் றவராகக் கருதப்படவில்லை.

தேர்தலுக்கு முன் கய்யூம் மக்களுக்கும் பல வாக்குறுதிகளை அளித்தார். நாட்டிற்குப் புதிய அரசியல் முறை, அதிகாரங்களை அடிமட்டம்வரை பகிர்ந்தளித்தல், தேர்தல் முறையில் திருத்தம், மக்கள் நேரடியாக அதிபரைத் தேர்ந்தெடுத்தல், அரசியல் கட்சிகள் செயல்பட அனுமதித்தல், இளைஞர்களுக்கு ஊக்கம் அளித்தல், போதைப் பொருள்களைத் தடை செய்தல் ஆகியவை அவையாகும். இளைஞர்களின் முன்னேற்றப் பிரிவை கய்யூம், ரஷீதா யூனுஸ் என்ற இளமாதிடம் ஒப்படைத்தும் இருக்கிறார்.

உலகில் மிகச் சிறிய குடியரசு நாடுகளில் மாலத்தீவுகளும் ஒன்றாகும். சுமார் 130 சதுர கிலோ மீட்டரில் பரவியுள்ள 1200 தீவுகள் கொண்டது இந்த நாடு. இவற்றில் 200 தீவுகளில் மட்டுமே மனிதர்கள் வாழ்கிறார்கள். எந்தத் தீவின் பரப்பளவும் 13 சதுர கிலோ மீட்டருக்கு மேல் இல்லை.

கி.மு. நான்காவது நூற்றாண்டில் தென்னிந்தியாவிலிருந்து சில திராவிட மக்கள் முத லில் அத்தீவுகளுக்குச் சென்றார்கள் என்றும் பின்னர் வட இந்தியாவிலிருந்தும் சிலர் வந் தார்கள் என்றும் அந்நாட்டு வரலாற்றிலிருந்து தெரிய வருகிறது. ஸ்ரீலங்காவிலிருந்தும் சிலர்




வந்து இங்கு குடியேறியதாகவும் தெரிய வருகிறது. அவர்களோடு புத்த மதமும் அங்கு சென்றது. 12வது நூற்றாண்டில் இத்தீவுகளின் மன்னர் முகம்மதிய மதத்தைத் தழுவிய தோடு மக்களும் இஸ்லாமியர்களாக வேண்டும் எனக் கட்டளை இட்டார். அதன் பிறகு ஆங் காங்கே மசூதிகள் கட்டப்பட்டன.

இத்தீவுகள் 1887ல் பிரிட்டீஷார் வசமாகி 1965ல் சுதந்திரம் பெற்றது. 1968ல் இது குடியரசு ஆகியது. அந்த ஆண்டிலேயே இப்ராஹீம் நஜீர் இந்நாட்டின் அதிபராகி 1978 வரை அப்பதவியில் இருந்தார். அதன்பின் கய்யூம் இந்நாட்டின் அதிபரானார்.

## வியப்பூட்டும் சில விவரங்கள்

* மாலத்தீவுகளின் மக்கள்களெல்லாம் ஒரு விளையாட்டு அரங்கத்தில் அடங்கிவிடுவார்கள்.
* அத்தீவுகளில் பெரும்பாலோர் ஆங்கிலம் பேசுகிறார்கள். அராபிய வார்த் தைகள் கொண்ட சிங்கள மொழி இங்கு திவேஹி மொழியாக வழக்கில் உள்ளது.
* இங்கு அரசியல் கட்சிகளோ, அஞ்சலகங்களோ, தனி வரிகளோ கிடை யாது.
* கடற்கரைப் பாதுகாப்பிற்கான படையைத் தவிர வேறு எந்தப் படையும் இல்லை.
* இங்கு சிறைச்சாலைகள் இல்லை. கொடூரக் குற்றங்களும் மிகமிகக் குறைவே.
* நாட்டின் பொருளாதாரம் மீன் பிடித்தலையும் சுற்றுலாப் பயணிகள் வருகையையும் பொறுத்தே உள்ளது.



# தூக்கம் வராதே!

**சா**ளுவ மன்னன் ஒருநாள் கனவில் தனக்கு நள மகராஜன் வந்து ஒரு புது ரகத் தின்பண்டத்தைக் கொடுத்ததுபோலக் கண்டான். அதுபோன்ற தின்பண்டத்தைச் செய்து தருமாறு தன் சமையல்காரனுக்குக் கட்டளை இட சமையல் கட்டிற்குச் சென்றான். அப்போது சமையல்காரன் அதுபோன்ற தின்பண்டத்தையே தயாரித்துத் தின்று கொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டான்.

தன்னையே மன்னன் உற்று கவனிப்பதைக் கண்ட சமையல்காரன் சட்டெனத் தான் சாப்பிடும் பண்டத்தை எடுத்து மறைத்தான். மன்னனோ "அது என்ன? இப்படிக் கொடு. நானும் சாப்பிடுகிறேன்." என்றான். சமையல்காரனோ "இதையெல்லாம் தாங்கள் சாப்பிடக் கூடாது ஒரே புளிப்பும் காரமுமாய் இருக்கும்" என்றான். மன்னனோ அதை எடுத்து சாப்பிட்டுவிட்டு "பேஷ்! ரொம்ப நன்றாக இருக்கிறது. இனிமேல் இந்தத் திண்பண்டத்தை வாரத்திற்கு ஒருமுறையாவது தயாரித்து எனக்குச் சாப்பிடக் கொடு" என்று கூறிவிட்டுப் போனான்.

ஆனால் அன்றிரவு மன்னனால் சரியாகத் தூங்க முடியவில்லை. வயிற்றில் வலியும் இரைச்சலும் ஏற்பட்டது. எனவே படுக்கையில் உட்கார்ந்து ராணியை எழுப்பித் தனக்குத் தூக்கம் வரவில்லை என்று கூறினான்.

அதைக் கேட்ட ராணி "எப்படித் தூக்கம் வரும்? நம் மகனின் மோசமான நடத்தை பற்றி கவலைப் பட்டுக் கொண்டிருப்

—குரு ரம்யா—



பீர்கள். அவனுக்கோ இளம் வயது. விரைவில் திருந்திவிடுவான். கவலைப்படாதீர்கள்'' என்றாள்.

அதுவரை மன்னனுக்குத் தன் மகனின் நடத்தைப் பற்றித் தெரியாது. ராணி சொன்னதைக் கேட்டு ஆச்சரியப்பட்டான். ராணியோ மறுநிமிடமே நன்கு தூங்கலானாள். மன்னனுக்கு வயிற்று வலி அதிகரித்தது. அதனால் ராஜ வைத்தியரை அழைத்துவர ஆளை அனுப்பினான்.

வைத்தியரும் வந்து மன்னனை பரீட்சித்துப் பார்த்துவிட்டு அவன் உடலில் எவ்விதக் கோளாறும் இல்லையே எனக் கண்டு திகைத்து நின்றான். அப்போது அங்கு வந்த பொக்கிஷ அதிகாரி ''அரசே! தங்களுக்குத் தூக்கம் வரவில்லை என்று கேட்டு வந்தேன். பொக்கிஷத்தில் பணம் இல்லை, செலவு அதிகம் என்று தானே கவலைப் படுகிறீர்கள். அதற்கு ஏதாவது வழியா இராது? விரைவில் கண்டு பிடிக்கலாம். கவலைப்படாதீர்கள்'' என்றான்.

இதே சமயம் அங்கு வந்த சேனாதிபதி ''அரசே! தாங்கள் சரியாகத் தூங்கவில்லையாமே! அண்டை நாட்டு மன்னன் நம்மைத் தாக்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறான் என்று கவலைப் படுகிறீர்களா? நம் படைகளின் பலம் மிக அதிகம். அவனது படைகளை நாம் விரட்டிவிடுவோம்'' என்றான்.

அப்போது வந்த அமைச்சரும் ''நாட்டில் லஞ்ச ஊழல் அதிகாரிகள் அதிகரித்துவிட்டார்கள். என்று கவலைப்பட்டா தாங்கள் தூங்கவில்லை? அந்த அதிகாரிகளை விரைவில் கண்டுபிடித்து வேலையிலிருந்து நீக்கிவிடுகிறேன்'' என்றான்.

மன்னன் அவர்களை எல்லாம் போகச் சொல்லிவிட்டு தன் வயிற்று வலி பற்றித் தன் தாயாரிடம் கூறி ஏதாவது லேகியம் வாங்கிச் சாப்பிட நினைத்து அவளை காணச் சென்றான். அவனது தாயார் அவனைக் கண்டதும்

''உனக்குத் தூக்கமே வரவில்லையாமே! எப்படி வரும்? நீ உன் மகனைப் பற்றியும், பொக்கிஷ நிலை பற்றியும், நாட்டின் பாதுகாப்பு பற்றியும் அதிகாரிகளின் நடத்தை பற்றியும் நினைத்துக் கவலைப்பட்டிருப்பாய். ஆட்சியிலுள்ள மன்னனால் சரியாகத் தூங்க முடியாது. இதற்காகத் தானே உன் தந்தை தன் பொறுப்பை எல்லாம் உன்னிடம் ஒப்படைத்து உன்னை நாட்டின் மன்னனாக்கி விட்டு இப்போது அவர் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருக்கிறார்! மன்னனுக்கு எப்போதும் ஏதாவது ஒரு பிரச்னை இருந்து கொண்டே இருக்கும். அதனால் அவனுக்குத் தூக்கம் வராதுதான்'' என்றாள்.

மன்னனும் ''அம்மா! எனக்குத் தூக்கம் வராததற்குக் காரணம் சாப்பாடு சரியாக இல்லாததுதான்'' எனவே அவளும் ''ஆமாம். இவ்வளவு பிரச்னைகள் இருக்க உணவை ருசித்து சாப்பிடக்கூட முடியாதுதான். எனவே பிரச்னைகளுக்கு நீயே வழி கண்டுபிடி. அப்போதுதான் உனக்குத் தூக்கம் வரும். நன்கு ஒரு மன்னன் தூங்குகிறான் என்றால் அவன் நாட்டு மக்கள் சுகமாக இருக்க வேண்டும் அல்லது மன்னன் ஆட்சிபற்றிக் கவலைப் படாமல் இருக்க வேண்டும். நல்ல மன்னன் ஆட்சியில்தானே கவனம் செலுத்துவான். இதனால்தான் உனக்குத் தூக்கம் வரவில்லை'' என்றாள்.

ஒரு வயிற்று வலி தனக்கு இவ்வளவு விஷயங்களை உணர்த்தியதா என்று மன்னன் ஆச்சரியப் பட்டான். வயிற்று வலியை உண்டாக்கக் காரணமாக இருந்த தன் சமையல்காரனை மன்னன் அழைத்து அவன் தனக்கு உதவி செய்தான் எனக் கூறிப் பரிசுகளை அளித்தபோது சமையல்காரன் ஒரேயடியாகத் திகைத்துத்தான் போனான்.





# ஜாதக தோஷம்!

வேம்பு சாஸ்திரிக்குப் புரோகிதம் செய்து வைக்கும் மந்திரங்களே தெரியும். ஆனால் அவர் தமக்கு சோதிடம், ஆருடம், மாந்திரீகம் முதலியன எல்லாம் தெரியும் என்று கூறி மக்களை ஏமாற்றி ஏதாவது ஹோமம் செய்து கெட்ட கிரகங்களிடமிருந்து விடுதலை பெற வேண்டும் எனக் கூறிப் பணம் பறித்து வந்தார். கிராம மக்களும் அவர் கூறுவதை நம்பி அவர் சொன்னபடி எல்லாம் செய்து வந்தார்கள்.

அந்த ஊருக்கு மாற்றலாகி குருசாமி என்ற பள்ளி ஆசிரியர் வந்தார். அவருக்கு வேம்பு சாஸ்திரியின வீட்டிற்குப் பக்கத்து வீட்டிலேயே குடி இருக்க இடம் கிடைத்தது. அவர் சாஸ்திரியின் கபடச் செயலைக் கண்டு அதற்கு ஓர் முடிவு கட்டத் தீர்மானித்தார்.

ஒருநாள் வேம்பு சாஸ்திரியே குருசாமியைக் கண்டு "நான் சோதிட சாஸ்திரத்தில் கரை கண்டவன். உங்களைப் பார்த்ததுமே இப்போது உங்களுக்குச் சனிதோஷம் பிடித்திருக்கிறது என்று தெரிந்து கொண்டுவிட்டேன். இன்னும் பத்து நாட்களில் உங்களுக்குப் பெரிய கண்டம் வரும். அதனால் உங்கள் உயிருக்கே ஆபத்து நேரலாம்" என்றார்.

குருசாமியும் "அப்படியா! இந்த கண்டத்திலிருந்து தப்ப வழி இல்லையா?" என்று கேட்க வேம்புவும் "ஏன் இல்லாமல்? இந்த தோஷத்தைப் போக்கி கண்டத்திலிருந்து தப்ப என் போன்ற ஒரு நல்ல பிராம்மணனுக்கு ஒரு பசு மாட்டை தானம் செய்தால் போதும். இதற்கு ஒரு ஹோமமும் செய்ய வேண்டும்.

—கி. வெங்கடாசலம்—

மொத்தம் ஐநூறு ரூபாய் செலவாகும்'' என்றார்.

குருசாமியும் ''ஐயோ! ஐநூறு ரூபாயா? என்னிடம் இருநூறு ரூபாய்தானே இருக்கிறது. அதற்கு மேல் கொடுக்க முடியாதே'' எனவே வேம்பு சாஸ்திரியும் ''பரவாயில்லை. நான் சரிப்படுத்திக் கொள்கிறேன். ஒரு நூறு ரூபாய் கொடுத்து என்னிடமுள்ள பசுமாட்டை இப்போது வாங்கிக் கொள்ளுங்கள். வரும் சனிக்கிழமையன்று ஹோமம் செய்து பசுமாட்டை நானே தானமாக வாங்கிக் கொள்கிறேன் ஹோமத்தை மீதமுள்ள நூறு ரூபாயில் முடித்து விடுகிறேன்'' என்றார்.



குருசாமியும் நூறு ரூபாய் கொடுத்து வேம்பு சாஸ்திரியின் மாட்டைத் தன் வீட்டிற்கு ஓட்டி வந்துவிட்டார். சனிக்கிழமை வந்தது. வேம்பு சாஸ்திரி குருசாமியின் வீட்டிற்குப் போய் ''பணம் கொடுங்கள். ஹோமத்திற்கு வேண்டிய சாமான்களை வாங்கி வருகிறேன். பிறகு பசுவை எனக்குத் தானம் செய்யுங்கள்'' என்றார்.

அப்போது குருசாமி ''இந்த ஹோமம் செய்வதால் எந்தப் பயனும் இல்லை என்றே நான் நினைக்கிறேன். அதனால் ஹோமமும் செய்யப் போவதில்லை. பசுமாட்டையும் தானம் கொடுக்கப் போவதில்லை'' என்றார்.

அப்போது வேம்பு சாஸ்திரி ''அடே பாவி! சனி தோஷம் உனக்குப் பிடித்திருக்கிறது. இன்னும் ஒரு வாரத்தில் உனக்கு கண்டம் வரப் போகிறது. இந்த ஹோமம் செய்து பசுவை எனக்குத் தானம் செய்யாவிட்டால் உன் உயிருக்கே ஆபத்து. தெரிந்ததா?'' என்று பலமாகக் கத்தினார்.

அவர் போட்ட கூச்சலைக் கேட்டுத் தெருவில் போய்க் கொண்டிருந்தவர்களெல்லாம் அங்கு கூடி விட்டார்கள். வேம்பு சாஸ்திரியும் ''நான் எவ்வளவு படித்தவன்! சாஸ்திரம் சோதிடம் சொல்வதில் நிபுணன் என்பது உங்களுக்

கெல்லாம் தெரியும். நேற்று இந்த ஊருக்கு வந்த இந்த வாத்தியார் நான் சொல்வதை நம்ப மாட்டா ராம்! ஹோமம் செய்ய மாட்டா ராம்! என்ன அக்கிரமம்'' என் றார்.

குருசாமியும் ''எனக்கு இவர் சொல்லும் ஹோமத்தில் நம் பிக்கை இல்லை. இன்னும் ஒரு வாரத்தில் என் உயிருக்கே ஆபத்து வரும் என்கிறார். அப் படி உண்மையாக நடந்தால் நான் இவரைக் கொண்டே பெரிய ஹோமம் செய்து இரண்டு பசுக் களை தானமாக இவருக்கே கொடுக் கிறேன். ஆனால் இப்போதோ ஹோமமோ, பசுவை தானம் செய் வதோ நடக்காது'' என்றார்.

அங்கு கூடியவர்களும் வேம்பு சாஸ்திரியிடம் ''அவர்தான் அடுத்த வாரம் கண்டம் ஏற்பட்டால் பெரிய ஹோமமும் பசுதானமும் செய்வதாகச் சொல்கிறாரே. பேசா மல் ஒப்புக் கொண்டு போங் களேன்'' என்று கூறி அவரை அவரது வீட்டிற்குப் போகச் சொன்னார்கள்.

வீட்டிற்கு வேம்பு சாஸ்திரி முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு போனார். அவரது மனைவியோ ''உங்களுக்கு எதற்கு ஜோஸ்யம், மாந்தரீகம் என்ற அக்கப்போர் எல்லாம்? பேசாமல் புரோகிதம் மட்டும் செய்யுங்கள் அதில் வரும் வருமானமே போதும்'' என்றார்.

வேம்பு சாஸ்திரியும் ''சரி தான். நான் சொன்னபடி குரு சாமிக்கு கண்டம் எதுவும் வராது நானும் பெரிய ஹோமம் செய்யப் போவதில்லை. பசுமாட்டு தான மும் அவனிடமிருந்து பெறப் போவதில்லை. நல்ல கறவை மாட்டை குருசாமிக்கு நூறு ரூபாய்க்கு விற்றேனே. இது தான் என் போதாத காலம்'' என்று தலையில் அடித்துக் கொண்டார்.






# 10

*[உத்தமனின் துணிச்சலை நாகபுர மன்னன் பாராட்டி அவனுக்கு உதவ சில வீரர்களை அனுப்புவதாக வாக்களித்தான். நாகபுர இளவரசி மல்லிகா உத்தமனை கூட்டி வரச் செய்து அவனிடம் நாகசிம்மன் நாகபுரச் சிம்மாசனத்தை அடையச் சதி செய்வதாயும் அச்சதியை முறியடிக்க அவன் உதவ வேண்டும் என்றும் கோரினாள். இளவரசியின் மாளிகையில் வைக்கப்பட்டிருந்த அதிசய மலர்கள் காணாமல் போகவே மன்னன் அவற்றைக் கண்டு பிடிக்கும்படி சேனாதிபதிக்குக் கட்டளை இட்டான். பிறகு—]*

அரண்மனையிலிருந்த வந்த சேனாதிபதி உத்தமனை உடனே அழைத்து வரும்படி ஆளை அனுப்பினான். அதிசய மலர் திருட்டைக் கண்டுபிடிக்க நாகசிம்மனை நியமிக்கலாமா என அவன் எண்ணினான். ஆனால் மன்னன் நாகசிம்மனைக் கொஞ்சமும் விரும்பவில்லை என்பதால் அந்த யோசனையைக் கைவிட்டான்.

சற்று நேரத்தில் உத்தமன் வந்து அவனை வணங்கி "என்னை வரச் சொன்னீர்களாமே. இன்றே நாங்கள் புறப்பட வேண்டுமா? அதற்கு முன் நான் காயாம்புவின் குடியிருப்பிற்குப் போய் அங்கு நான் விட்டு வைத்திருக்கும் அதிசய மலர்களை எடுத்து வந்து என்படகில் வைக்க வேண்டும்" என்றான்.



போதே நாகசிம்மனும் அங்கு வந்து சேர்ந்தான்.

சேனாதிபதி உத்தமனுக்கு அவனை அறிமுகப்படுத்தியவாறே" நாக சிம்மா! இவன்தான் உத்தமன். இவனுக்கு உதவத்தான் நீ சில வீரர்களோடு செல்ல வேண்டும். இவனை உன் இருப்பிடத்திற்கு அழைத்துப் போ. என்ன செய்ய வேண்டும் எனப் பேசி முடிவு செய்யுங்கள். மன்னர் இவனது பயணம் வெற்றிகரமாக முடிய வேண்டும் என்று விரும்புகிறார். என்பதை நினைவில் வைத்துக் கொள்" என்று கூறினான்.

நாகசிம்மனும் சிரித்தவாறே "ஆகா! நீங்கள் கூறியடிபயே நடக் கிறேன். ஒரு திட்டம் வகுத்தபின் இன்று மாலையே வந்து தங் களைக் காண்கிறேன்." எனக் கூறித் தன்னோடு உத்தமனை அழைத்துக் கொண்டு சென்றான்.

இருவரும் சற்று தூரத்தில் படை வீர்கள் தங்கப் போடப் பட்டுள்ள கூடாரங்களுள்ள பகு தியை அடைந்தார்கள். நாகசிம் மன் உத்தமனைத் தன் கூடாரத்திற் குள் அழைத்துச் சென்றான். அது வரை அவன் உத்தமனிடம் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. உத்தமனும் எதுமவும் பேசாமல் மௌனமாகவே அவனோடு சென் றான்.

நாகசிம்மன் கூடாரத்திற்குள்

சேனாதிபதியும் "ஆமாம். போக வேண்டியதுதான். உன்னோடு நாகசிம்மன் என்ற தளபதியை அனுப்பப் போகிறேன். அவனை எல்லைப்புறத்திலிருந்து வரவழைத்து விட்டேன். அவன் உன்னோடு கலந்து பேச வருவான். ராட்சஸ மிருகத்தை ஒழிக்க என்ன செய்ய வேண்டும் என்று நீயும் அவனும் பேசி முடிவுக்கு வாருங்கள்" என் றான்.

உத்தமனும் "நாகசிம்மனா? எப்போது என்னைக் காண வரு வான்?" என்று கேட்கவே சேனாதி பதியும் "அவன் இன்னும் சற்று நேரத்தில் இங்கு வந்துவிடுவான்" என்று கூறிக் கொண்டிருக்கும்



போனதும் அங்கிருந்த ஒரே நாற்காலியில் மிடுக்காக அமர்ந்து உத்தமனைப் பார்த்தான். உத்தமனும் அங்கிருந்த முக்காலியை இழுத்து நாகசேனனின் அருகில் போட்டு அதன்மீது கால்மேல் போட்டு உட்கார்ந்து கொண்டு "உன்னை எனக்கு உதவியாளனாக அனுப்ப சேனாதிபதி தேர்ந்தெடுக்கிறார். எனவே நீ நான் சொல்வதை கவனமாகக் கேள்" என்றான். நாகசிம்மனும் கேலியாக "ஆமாம் மன்னரும் மற்றும் பலரும் உன் பயணம் வெற்றிகரமாக முடிய வேண்டும் என விரும்புகிறார்களே. அப்படி என்ன பயங்கரப் பயணமாம் அது?" என்று கேட்டான்.

உத்தமன் அதைக் கேட்டதும் நாகசிம்மனுக்குத் தன்னைப் பிடிக்கவில்லை என்பது தெரிந்துவிட்டது. ஆனாலும் அதை வெளிக்காட்டாமல் தான் ராட்சஸ மிருகத்தை அடக்க மேற்கொண்டுள்ள பயணம் பற்றிக் கூறினான். அது கேட்டு நாகசிம்மனும் "இதுவரை நீ தனி ஒருவனாகவே வீரச் செயல்களைச் செய்திருக்கிறாய். இனிமேலும் நீ மட்டுமே போகலாமே. என் உதவி எதற்கு?" என்று கேலியாகக் கேட்டான்.

உத்தமனும் "நானும் மன்னரிடம் தனியாகவே போவதாகக் கூறினேன். ஆனால் அவர்தாம் எனக்குத் துணையாகச் சில வீரர்களை அனுப்பும்படி சேனாதிபதிக்கு கட்டளை இட்டார். அதனால் சேனாதிபதி உன்னையும் சில வீரர்களையும் என்னோடு அனுப்பத் தேர்ந்தெடுத்தார். அந்த ராட்சஸ மிருகம் இந்நாட்டின் பக்கமோ அல்லது மாணிக்கபுரி அருகிலோ வராமல் வெகுதூரத்திற்கு விரட்டிவிடுவதே என் நோக்கம். அதற்கேற்ப நான் திட்டம் போட்டுச் செயல்பட வேண்டும் தெரிந்ததா?" என்று சற்று அதிகார தோரணையில் கூறினான்.

அப்போது நாகசிம்மன் "இந்த நாகபுர நாட்டைப்பற்றி நீ கவலைப்



கண்டார்கள். அந்த ராட்சஸ மிருகம் அதிசய மலருக்காக வருகிறது என அறிந்து அம்மலரைக் கொண்டு அதனை விரட்ட எங்கள் மன்னர் தீர்மானித்தார். அதற்காக என்னை அனுப்பினார். நீ ராட்சஸ மிருகத்தின் பெயரைக் கேட்டாலே நடுங்குவதுபோல் தெரிகிறது. இதை நான் சேனாதிபதியிடம் தெரிவித்துவிட்டு நான் தனியாகவே திட்டமிட்டுச் செயல்படுகிறேன்'' எனக் கூறி எழுந்தான்.

அது கண்டு நாகசிம்மன் "உட்கார். உட்கார் எனக்கு பயமா! நான்பயிற்சிபெற்ற படைத் தலைவன். சாதாரண வீரனல்ல.'' என்றான். உத்தமனும் "ஓகோ! அப்படியா! உன்னைவிடத் திறமை வாய்ந்த பல படைத் தலைவர்கள் எங்கள் மாணிக்கபுரியில் இருக்கிறார்கள். நீ அவர்களின் கால் தூசிக்குக்கூட சமமாக மாட்டாய்'' என்றான்.

நாகசிம்மனும் "சரி சரி. இப்போது என்ன செய்ய வேண்டும்? அதைச் சொல்'' எனவே உத்தமனும் "நான் கொண்டு வந்த அதிசயமலர்களில் ஒரு கட்டைத் தான் இந்நாட்டு மன்னரிடம் கொடுத்தேன். மீதக் கட்டுகளைக் காயாம்புவின் வீட்டில் வைத்து விட்டு வந்திருக்கிறேன். அவற்றை எடுத்து வந்து நாம் போகும் படகில் வைத்துக் கொள்ள வேண்

பட வேண்டாம். இதைப் பாது காக்க எங்களுக்குத் தெரியும். உன் உதவி ஒன்றும் தேவை இல்லை. நீ என்னவோ ராட்சஸ மிருகத்தைப் பார்த்ததாகக் கூறு கிறாயே! உண்மையிலே அப்படி ஒரு மிருகம் இருக்கிறதா? இது வெறும் கட்டுக்கதை. இதை மற்றவர்கள் நம்பினாலும் நான். நம்ப மாட்டேன்'' என்றான்.

உத்தமனும் "நீ நம்புகிறாயா இல்லையா என்பது எனக்குத் தேவை இல்லாதது. நான் அதைப் பார்த்தேன். அது என் நாட்டில் செய்த அட்டூழியங்களையும் அழிவுகளையும் நான் கண்டேன். என் நாட்டில் பல படைவீர்களும்



யிடம் கொடுத்தார். அவளும் அதை எடுத்துச் சென்றாள். அது இப்போது எங்கே உள்ளது என்று நான் எப்படிக் கூற முடியும்?'' என்றான்.

நாகசிம்மனும் "அதுபற்றி நான் மன்னரிடமோ ராணியிடமோ கேட்டுத் தெரிந்து கொள்கிறேன். ராணியார் என் தமக்கை என்பது உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான். உத்தமனும் "தெரியாதே. இப்போது நீ சொல்லி தான் தெரிந்து கொண்டேன்'' என்று கூறினான். அது தனக்கு முன்பே தெரியும் என நாகசிம்மனிடம் கூற அவன் விரும்பவில்லை.

உத்தமனும் "சரி, நாம் கிளம்புவது பற்றி இன்று மாலை சேனாதிபதியைப் பார்த்து பேசி முடிவு செய்வோம்'' எனக் கூறிவிட்டுத் தன் விடுதிக்குச் சென்றான். அவன் சேனாதிபதியிடமிருந்து ஏதாவது செய்தி வருமா என்று அன்று முழுவதும் எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தான். ஆனால் மாலைப் பொழுதாகியும் யாரும் வரவில்லை.

மறுநாள் காலை தான் பரபரப்போடு காயாம்பு உத்தமன் இருந்த இடத்திற்கு ஓடி வந்தான். அது கண்டு உத்தமன் "என்ன விஷயம்? ஏன் பதட்டப்படுகிறீர்கள்?'' என்று கேட்டான்.

டும்'' என்றான்.

அதுகேட்டு நாகசிம்மன் "அப்படியானால் அதிசய மலரை நான் இங்கே அரண்மணயிலேயே பார்க்கலாம் என்று சொல்கிறாயா?'' என்று கேட்டான். உத்தமனும் "பார்க்கலாம். ஆனால்'' என்று மேலும் சொல்லப் போனவன் சட்டென நிறுத்திக் கொண்டான். நாகசிம்மனும் "ஆனால் என்ன? இப்போது அந்த மலர்கள் அரண்மனையில் இல்லையா?'' என்று கேட்டான்.

உத்தமனும் "அவை இப்போது எங்கே உள்ளன என்று என்னால் சொல்ல இயலாது. எனென்றால் மன்னர் அம்மலர்களை இளவரசி

காயாம்புவும் "நீ என் வீட்டில் வைத்துவிட்டுப் போன அதிசய மலர்கள் காணவில்லை. அவற்றை பத்திரமாகப் பாதுகாத்து வரும்படி தினமும் என் மகள் சித்ராவிடம் கூறிவந்தேன். நேற்றுவரை அவளது அறையில் அந்த மலர்கள் பத்திரமாகத்தான் இருந்தன. இன்று காலை அவள் கண்விழித்துப் பார்த்தபோது அவை காணப்படவில்லை. எங்கு தேடியும் அவை கிடைக்கவில்லை. அவை எப்படி மாயமாய் மறைந்தனவோ? ஒரு வேளை ராட்சஸ மிருகம் வந்து அவற்றை எடுத்துப் போயிருக்குமோ?" என்று கவலையுடன் கேட்டான்.

உத்தமனும் "அது எடுத்துப் போயிராது. ஏனெனில் அது அடி எடுத்து வைத்த இடம் நொறுங்கிப் பாழாகிவிடும். நேற்று நாகசிம்மனிடம் நான் இந்த மலர்கள் உங்கள் வீட்டில் இருப்பதாகக் கூறினேன். இந்த நாகசிம்மன் எனக்கு உதவ என் பயணத்தின்போது வர வேண்டியவன். இவன் சதிகாரன். நாகபுர சிம்மாசானத்தில்தான் அமர வேண்டும் என்று ஆசை கொண்டவன். இதற்காகச் சதி செய்து கொண்டிருக்கிறான் என்று இளவரசியே என்னிடம் சொன்னாள். அவனால் மன்னருக்கே ஆபத்து நேரிடலாம். ஒருவேளை இந்த நாகசிம்மன்தான் உங்கள் வீட்டிலிருந்து அந்த அதிசய மலர்களைத் திருடிக் கொண்டு போயி



ருப்பானோ என்ற சந்தேகம் எனக்கு ஏற்படுகிறது'' என்றான்.

காயாம்புவும் "ஆமாம். நாக சிம்மனுக்கு இப்படிப்பட்ட ஆசை இருப்பதாக நானும் கேள்விப்பட்டேன். இப்படிப்பட்ட நய வஞ்சகனையா உனக்குத் துணையாக அனுப்பத் தீர்மானித்திருக்கிறார்கள்? நீ விழிப்புடன் இருக்க வேண்டும். நீ சேனாதிபதியிடமிருந்து ஏதாவது செய்தி வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பதால் நீ இங்கேயே இரு. நான் போய் மன்னரைக் கண்டு அதிசய மலர் திருட்டுப் போனது பற்றிக் கூறுகிறேன்.'' என்று சொல்லி விட்டு மன்னனைக் காணச் சென்றான்.

காயாம்பு சொன்னதை கவனமாகக் கேட்ட மன்னன் "ஓ! உன் வீட்டிலிருந்தும் அதிசய மலர்கள் திருட்டுப் போய்விட்டனவா? இதை ராட்சஸ மிருகம் செய்திருக்க முடியாது. வேறு யாராவது தான் செய்திருக்க வேண்டும்'' என்று கூறி உடனே சேனாதிபதியை அழைத்துவரச் சொன்னான்.

சேனாதிபதி வந்ததும் மன்னன் "துர்ஜயா! காயாம்பு வீட்டிலிருந்தும் அதிசய மலர்கள் காணாமல் போய்விட்டனவாம். இது யாரோ செய்யும் சதி போலத் தோன்றுகிறது" என்றான். அப்போது காயாம்பு உத்தமனின் சந்தேகத்தை சேனாதிபதியிடமும் மன்னனிடமும் கூறினான்.

அப்போது சேனாதிபதி "ஓகோ! நாகசிம்மன் இந் நகருக்கு வந்த அன்று அதிசய மலர்கள் அரண்மனையிலிருந்து காணாமல் போயின. நேற்று உத்தமன் நாகசிம்மனிடம் அதிசய மலர்கள் காயாம்புவின் வீட்டில் இருப்பதாகக் கூறியதும் நேற்றிரவே அவை காணாமல் போய்விட்டன. இப்போது எல்லாம் புரிந்து விட்டது'' என்றான் புருவத்தை நெறித்தவாறே. (தொடரும்)





# மன்னனின் தீர்மானம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழத்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கி நடக்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்தப் பயங்கர இரவில் நீ தொடர்ந்து விடாப்பிடியாக ஏதோ ஒரு வேலையில் முனைந்திருக்கிறாய். அது எவ்வளவு காலத்தில் முடியுமோ, யார் கண்டது? அதற்குள் நீ கிழவனாகிவிடுவாய். மனிதன் கிழவனாகி விட்டால் தன் உடலின் சக்தியை இழந்து பல பிரச்னைகளை எதிர் நோக்க வேண்டி வரும். இதற்கு உதாரணமாக ரங்கபுரி மன்னன் ராஜேந்திரனின் கதையைக் கூறுகிறேன்" என்று கூறி கதையை ஆரம்

## வேதாளம் சொல்லும் கதை



களும் திருட்டுகளும் நாளுக்கு நாள் அதிகரிக்கலாயின.

ராஜேந்திரனின் யானைப் பாகன் கேசவன். அவனும் நீண்டகாலம் அரசாங்க பணிபுரிந்து கிழவனாகி விட்டான். அவன் ஒருநாள் மன்ன னைக் கண்டு "அரசே! எனக்கோ வயதாகிவிட்டது என்னால் இனி யானைகளை அடக்க முடியாது. என் மகனை குருகுலத்திற்கு அனுப்பி நல்ல கல்வியும் அளித்தேன். அவனுக்கு, அவன் படிப்பிற்குத் தக்க அரசாங்க உத்தியோகம் கிடைக்கவில்லை. எனவே இப் போது அவனைத் தங்கள் யானைப் பாகனாக நியமித்து என்னை வேலையிலிருந்து ஓய்வு பெற அனுமதியுங்கள்" என்றான்.

மன்னனும் "சரி உன் மகனை அழைத்து வா. அவனது திறமை யைப் பார்த்துவிட்டு வேலை கொடுக்கிறேன்" என்றான்.

மறுநாள் கேசவன் தன் மகன் மாதவனை அழைத்து வந்தான். மன்னனும் அவர்களோடு யானைக் கட்டுத்தறிக்குச் சென்றான். அங்கு கரிமுகன் என்ற முரட்டு யானையை மன்னன் காட்டி "மாதவா! நீ இந்த முரட்டு யானையை அடக்கி அதன்மீது ஏறி உட்கார்ந்து அரண் மனையை சுற்றி வா பார்க்கலாம்" என்றான்.

மாதவனும் கரிமுகனைச் சிரமப் பட்டு அங்குசம் போட்டு அடக்கி

பித்தது.

ரங்கபுரி மன்னன் ராஜேந் திரன் நீதி நெறி தவறாமல் ஆட்சி புரிந்து மக்களைச் சுகமாக வாழ வைத்து வந்தான். ஆனால் அவனுக் குப் பின் நாட்டை ஆள அவனுக்கு ஒரு குழந்தை கூடப் பிறக்க வில்லை. அவன் இதுபற்றிக் கவ லைப் பட்டுக் கொண்டே இருக்க வருடங்கள் உருண்டோடி கிழவ னும் ஆகிவிட்டான்.

உடலின் தள்ளாமை காரணமா மன்னன் ஆட்சிப் பொறுப்பை அமைச்சர்களிடம் விட்டுவிடவே. அதிகாரிகள் லஞ்சம் வாங்கிக் கொண்டு மனம் போன போக்கில் நடக்கலனார்கள். நாட்டில் கொள்ளை

அதன்மீது ஏறி அமர்ந்து அரண்மனையைச் சுற்றி வந்தான். இதைக் கண்டு மன்னன் மகிழ்ந்து மாதவனைத் தன் பட்டத்து யானை வஜ்ஜிரமுகனின் யானைப் பாகனாக நியமித்தான்.

மன்னனின் பிறந்தாள் விழா இதற்குச் சில தினங்களுக்குப் பின் கொண்டாடப்பட்டது. வீதிகள் அலங்கரிக்கப்பட்டன. மன்னன் தன் பட்டத்து யானைமீது அம்பாரியில் அமர்ந்து ஊர்வலம் வர அந்த யானையை மாதவன் ஓட்டிக் கொண்டு சென்றான். மக்கள் வீதிகளின் இரு புறங்களிலும் நின்று மன்னனைக் கண்டு களித்துக் கொண்டிருந்தார்கள்.

அப்போது திடீரென ஆகாயத்தில் மேகங்கள் கவிழ்ந்து இடியுடன் மழை பெய்யலாயிற்று. மக்கள் கலைந்து ஓடினர். யானை ஒரு அலங்கார வளைவினுள் சென்றபோது அது 'படபட' வென முறிந்தது. அது கண்டு மாதவன் சட்டென யானையை வேகமாக ஓட்டி வளைவைக் கடந்து விட்டான். அதன் பிறகே அந்த வளைவு பெருத்த சத்தத்தோடு தரைமீது விழுந்தது. இப்படியாக மன்னன் ஒரு பெரிய விபத்திலிருந்து தப்பினான்.

அரண்மனையை அடைந்த மன்னன் மாதவனை மிகவும் பாராட்டி "நீ விரும்புவது ஏதாவது ஒன்றை இப்போது கேள். நான் கொடுக்கிறேன்" என்றான்.





மன்னன் அவ்வாறு கூறியதைக் கேட்டு மாதவன் "அரசே! எனக்கு மூன்று விருப்பங்கள் உள்ளன. முதலாவது என் நண்பன் ஜகன் நாதனைப் பற்றியது. அவன் என்னோடு குருகுலத்தில் படித்தவன். அவன் தங்கள் தர்பாரில் உத்தியோகம் பெற முயன்றான். ஆனால் அவனது முயற்சி பலிக்கவில்லை. அவனுக்கு அவனது தகுதிக்கு ஏற்ப ஒரு உத்தியோகம் கொடுக்க வேண்டும்" என்றான்.

அது கேட்டு மன்னன் அடுத்தது என்ன என்பதுபோல் பார்க்கவே மாதவனும் "இரண்டாவது என் பக்கத்து வீட்டில் ஏராளமான பொருள் திருட்டுப் போயிற்று. காவலதிகாரியிடம் அந்த வீட்டுக்காரன் புகார் செய்தும் அவரால் திருடனைப் பிடிக்க முடியவில்லை. அவருக்கு உதவ வேண்டும்" என்றான்.

மன்னன் அப்போதும் பேசாமல் இருக்கவே மாதவன் "என் மூன்றாவது விருப்பம் என் ஆரம்பப் பள்ளி ஆசிரியர் கடுமையான நோயால் கஷ்டப்படுகிறார். வைத்தியர்களெல்லாம் அவரைப் பார்த்துவிட்டு அவரது நோயை ராஜவைத்தியரால்தான் போக்க முடியும் என்று கூறிவிட்டுவிட்டார்கள். அவருக்கு வைத்தியம் செய்யத் தங்களது வைத்தியரை அனுப்ப வேண்டும்" என்றான்.

மன்னன் மாதவன் கூறியதைக் கேட்டு "நீ கேட்டதெல்லாம் மிகவும் நல்லதே. ஆனால் நான் முன்பு கூறியபடி இப்போது உன் ஒரு கோரிக்கையைத்தான் நிறைவேற்ற முடியும். என்ன கேட்கப் போகிறாய்?" என்று கேட்டான்.

மாதவனும் சற்று யோசித்துவிட்டு மன்னனிடம் "அரசே! அரசாங்க அதிகாரிகளில் சிலர் லஞ்சம் வாங்கிக் கொண்டு தம் கடமைகளை செய்வதில்லை. அவர்களைக் கடுமையாகத் தண்டித்து லஞ்சப் பேயை முற்றிலும் ஒழிக்க வேண்டும். இதுதான் நான் தங்களிடம் கோருவது" என்றான்.

அதுகேட்டு ராஜேந்திர மன்னன் மிகவும் மகிழ்ச்சி அடைந்து மாதவனைக் கட்டித் தழுவிக் கொண்டு "மாதவா! இதுவரை எந்நாட்டை ஆள எனக்குப் பின் எனக்கு வாரிசு என யாரும் இல்லையே என்று கவலைப்பட்டு கொண்டிருந்தேன். இப்போது நீ கேட்ட கோரிக்கையால் இன்றோடு அக்கவலை போயிற்று. உனக்கு விரைவிலேயே நான் இளவரசுப் பட்டம் கூட்டம் போகிறேன். எனக்குப் பின் இந்த நாட்டின் மன்னனாகப் போகிறாய்" என்று கூறினான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! ராஜேந்திரன் தன் சிம்மாசனத்தைத் தன் யானைப் பாகனின் மகனுக்குக் கொடுத்தது சரியா அல்லது முன் பின் யோசியாமல் முட்டாள் தனமாகச் செய்ததா? மாதவன் முதலில் வெளியிட்ட விருப்பங்களுக்கும் கடைசியில் மன்னனிடம் கேட்ட கோரிக்கைக்கும் எவ்விதத் தொடர்பும் இருப்பதாகக் கூடத் தெரியவில்லையே. இப்படி மன்னன் முடிவு செய்தது அவன் வயதாகிவிட்டதால் யோசிக்கும் சக்தியைக் கொஞ்சம் இழந்துவிட்டதாலா? இக் கேள்விகளுக்குச் சரியான விடைகள் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்" என்றது.

விக்கிரமனும் "சிலரது உடல்



தளர்ந்து போக அவர்கள் தோற்றத்தில் கிழவர்களாகத் தென்பட்டாலும் அவர்களும் மனம் தளராமல் உறுதியாக இருக்கும். இது ஒரு அபூர்வமான விஷயம். ஆனால் இயற்கைக்கு மாறானது அல்ல. ராஜேந்திரன் மாதவனைத் தனக்குப் பின் மன்னனாக வேண்டும் எனத் தேர்ந்தெடுத்தது புத்திசாலித்தனமான செயலே. ஏனெனில் மாதவனது மூன்று விருப்பங்களும் அவன் கோரிய நான்காவது கோரிக்கையில் அடங்கியுள்ளதைக் காணலாம். அவன் லஞ்சம் வாங்கும் அதிகாரிகளைத் தண்டிக்கச் சொன்னதும் லஞ்சத்தை ஒழிக்கச் சொன்னதும் எப்படி அவனது மூன்று விருப்பங்களுடன் தொடர்பு கொண்டது எனப் பார்ப்போம். லஞ்சம் கொடுக்காததால் அவனது நண்பனுக்குத் தர்பாரில் உத்தியோகம் கிடைக்கவில்லை. கொள்ளைக்காரர்களுடனும் திருடர்களுடனும் காவல் அதிகாரிகள் தொடர்பு கொண்டு அவர்களிடமிருந்து பணம் பெற்று வந்ததால் அவை அதிகரித்தன. மூன்றாவது விருப்பத்தை மன்னன் இரக்கம் காட்டி ராஜ வைத்தியரை ஆசிரியரின் வைத்தியத்திற்கு அனுப்புவான் என அவனுக்கு உறுதியாகத் தெரியும். மாதவனின் விருப்பங்கள் எல்லாம் சுயநலம் கருதாமல் பிறர் நலனுக்காகக் கேட்டப்பட்டவை. இப்படிப்பட்ட மாதவன் மக்கள் நலனையே முதலாவதாகக் கருதி ஆட்சிபுரிவான் என உறுதியாக ராஜேந்திரன் உறுதியாக நம்பியே புத்திசாலித்தனமான முடிவை எடுத்தான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பி மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.



# அம்புலிமாமா செய்திகள்

## வயிற்றுள் சென்ற சுண்டெலி

சீனாவில் குவான் சியாங் கிராமத்தில் ஹோங்ஹாக்சியா என்ற பெண்மணி இரவில் மெய்மறந்து தூங்கிக் கொண்டிருந்தாளாம். அப்போது ஒரு சுண்டெலி அவளது வாய்க்குள் நுழைந்துவிட்டது. அதனால் அவள் பயந்து கூச்சலிட்டாள். அவளது கணவன் ஓடிப்போய் வைத்தியரை அழைத்து வருவதற்குப் போனான். "அதற்குள் சுண்டெலி அப்பெண்மணியின் வயிற்றினுள் போய்விட்டது. வைத்தியர் மருந்து கொடுத்தார். அவள் வயிற்றில் மூன்று நாட்கள் ஓடித்திரிந்த சுண்டெலி அம்மருந்தின் காரணமாகக் கரைந்து போயிற்றாம்.

## வாய் நிறையப் புகை

அமெரிக்காவில் புகைப் பிடிப்பதை எதிர்க்கும் நாள் கொண்டாடப்பட்டபோது 'ஜிம்' என்பவன் 155 சிகரெட்களைக் குடித்துக் ஒரு புதிய சாதனையை ஏற்படுத்தினான். ஒன்றன் பின் ஒன்றாக அவன் சிகரெட்களைப் பற்ற வைக்காமல் எல்லாவற்றையும் ஒன்றாகப் பற்றவைத்துக் குடித்துக் காட்டி இச்சாதனையை புரிந்தானாம்..




## மிகக் குறைந்த வயது விமானி

சாண்டியாகோவைச் சேர்ந்த அகஸ்டியன் ஒரிட்ஜ் என்ற ஒன்பது வயதுச் சிறுவன் சென்ற அக்டோபரில் ஒற்றை இஞ்சின் விமானம் ஒன்றைத் தனியாக ஓட்டிச் சாதனை புரிந்தான். இன்று இவன்தான் மிகக் குறைந்த வயதுள்ள விமானி.



## நூறு வயதிற்கும் மேலான சகோதரிகள் சுயசரிதம்

நியூயார்க் மாநிலத்தைச் சேர்ந்த எலிஸபெத் டிலானி, சாரா டிலானி என்ற கருப்பர் இன அக்கா தங்கைகள் தங்கள் சுயசரிதத்தை எழுதியுள்ளார்கள். தம் நூற்றாண்டு அனுபவங்களை இவர்கள் வர்ணித்திருப்பதை யாவரும் வரவேற்றுப் படித்து வருகிறார்கள். நன்கு விற்பனையாகும் இப்புத்தகத்தை எழுதிய சாராவின் வயது 104. பல் வைத்தியராகத் தொழில்புரியும் எலிஸபெத்தின்வயது 102. இவர்கள் உடல் நலம் குன்றாமல் இருப்பதோடு மேலும் இருபது ஆண்டுகள் தாம் வாழப் போவதாகவும் உறுதியாக நம்புகிறார்கள்.

# வேலை வேண்டாம்!

ஏழுமலை காஞ்சீபுரத்தில் ஒரு கடையில் கணக்கர் வேலை காலி இருப்பதாக அறிந்து அங்கு சென்று அந்த நிறுவனத்தின் உரிமையாளன் உலக நாதனைக் கண்டான். உலக நாதனும் தன் வலது கையை நீட்டி "இந்த ஐந்து விரல்களில் எது பெரியது?" என்று கேட்டான்.

ஏழுமலையும் நடுவிரல் எனவே உலகநாதன் "தவறு. ஏனென்றால் எல்லா விரல்களுக்கும் ஒரே வயதுதான்" என்றான். அடுத்து உலகநாதன் தன் இடது கையை நீட்டி "இதிலுள்ள விரல்களில் எது மிகச் சிறியது?" என்று கேட்டான். ஏழுமலையும் எதுவும் சிறியது இல்லை" எனவே உலக நாதனும் "தவறு, சுண்டுவிரல் தான் சிறியது" என்றான்.

பிறகு உலகநான் "நீ சொன்ன பதில்களிலிருந்து உனக்கு இந்தக் கணக்கர் வேலை கிடைக்கும் என்று நினைக்கிறாயா?" என்று கேட்கவே ஏழுமலையும்" கிடைக்காது என்றே நினைக்கிறேன்" என்றான். அப்போது உலகநாதன் "தவறு. உனக்கு நான் இந்த வேலையைக் கொடுக்கிறேன். நாளையிலிருந்து வேலைக்கு வா" என் றான்.

ஏழுமலையோ "இந்த மாதிரி அசட்டுத்தனமாகப் பேசும் உங்களிடம் வேலைக்கு அமர்ந்தால் எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும். எனக்கு வேலை வேண்டாம்" என்று கூறிவிட்டுச் சென்றான்.



# அம்புலிமாமா அனுபந்தம்—63

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## ஊதா நிறக் குயில்




ராகேஷ் சர்மா வானவெளியிலிருந்து உலகம் முழுவதையும் பார்த்துவிட்டு நம் இந்தியா தான் மற்ற நாடுகளைவிட அழகாகத் தென்பட்டதாகக் கூறினார். கவிஞர் முகம்மது இக்பாலும் தம் 'சாரே ஜஹாம்ஸே அச்சா' என்ற பாடலில் இந்தியா ஒரு அழகான நந்தவனம் என்றும் இந்திய மக்கள் அதில் வாழும் புல்புல் எனப்படும் ஊதா நிறக் குயில்கள் எனவும் வர்ணித்திருக்கிறார்.

இந்தக் குயில்கள் மரங்களில் கிளைக்குக் கிளை தாவிப் பறந்து தம் இனிய குரலால் இசைப்பது இயற்கையின் அழகானதொரு காட்சியாகும்.

நம் நாட்டு ஊதாக் குயில்கள் பாடாது என்றும் பாரசீக நாட்டு ஊதாக் குயில்களே பாடக் கூடியவை என்று நம்பப்படுகிறது. மொகலாயச் சக்கரவர்த்தி ஜஹாங்கீரின் மனைவி நூர்ஜஹான் மனம்மகிழ பாரசீகத்திலிருந்து ஊதாக் குயில்களை வரவழைத்தாராம். இவ்வகைக் குயில்கள் நம் நாட்டில் காஷ்மீர் மலைப் பகுதிகளில் அதிகமாக உள்ளன. இவற்றின் உடல் ஊதா நிறத்திலும் தலை கருப்பாகவும் கண்ணங்கள் வெள்ளையாகவம் இருக்கும்.

தலையில் கொண்டையும், கழுத்தும் வாலும் கருப்பாகவும் மற்ற உடல் பகுதி வெளிறிய ஊதா நிறத்திலும் உள்ள புல்புல்களே மிக அதிகம். வாலின் ஆரம்பம் சிவப்புப் புள்ளிகளோடு இருக்கும். சிவப்பு அலகுள்ள புல்புலின் தலைக் கொண்டைக் கருப்பாக இருக்கும். சிலவற்றின் மார்பின் கீழ் மாலை போன்ற கோடு இருக்கும். சிவப்பு நிற அலகுள்ள புல்புலை சிப்பாய் புல்புல் என அழைக்கிறார்கள்.

ஜோடிகளாக வாழும் புல்புல்கள் அவ்வப்போது சண்டை போட்டுக் கொண்டே இருக்கும். ஆனால் இவை தம் கூடுகளை மிகவும் சுத்தமாக வைத்துக் கொள்கின்றன.






## அம்ருதா ஷேர்-கில்

தம் இருபத்தொன்பதாவது வயதிற்குள் தற்கால ஓவியக் கலையில் தனக்கென ஒரு பாணியை வகுத்துக் கொண்டு சிறந்த ஓவியர்களுள் ஒருவராய் விளங்கியவர் அம்ருதா ஷேர்.

அவரது தந்தை ராஜா உம்ராவ் சிங் தாய் ஹங்கேரி நாட்டைச் சேர்ந்த மேரி. இவர் 1913ல் புடாபெஸ்டில் பிறந்தார். இவரது தந்தை உம்ராவ்சிங் ஷேர் கில் சமஸ்கிருதம், பாரசீகம் ஆகிய மொழிகளில் தலைசிறந்த பண்டிதர்.

சிறுமியாக இருந்தபோதே அம்ருதா ஓவியக் கலையில் நாட்டம் கொண்டார். 1921ல் இவரது தாய் தந்தையர் இந்தியாவிற்கு வந்து சிம்லாவில் வசிக்கலாயினர். அங்குள்ள மலைகளும், மரங்களும் அம்ருதாவைப் பெரிதும் கவர்ந்தன. அம்ருதா ஐரோப்பியாவிலேயே கல்வி கற்க வேண்டும் என்று எண்ணி அவரது தாய், தந்தையர் அவரை இத்தாலியின் ப்ளாரன்ஸ் நகருக்கு அழைத்துச் சென்றனர். ஓவியக் கலையில் தம் மகளுக்கு உள்ள ஆர்வத்தைக் கண்டு அவரது பெற்றோர் அவரை அங்குள்ள ஒரு ஓவியப் பள்ளியில் சேர்த்தார்கள்.

ஆனால் அம்ருதா ஐரோப்பியப் பாணி ஓவியக் கலையைவிட இந்திய முறையைத் தனதாக்கிக் கொள்ளவே விரும்பினார். அஜந்தா ஓவியங்கள் அவரை மிகவும் கவர்ந்தன. அவர் இந்தியாவிற்கு வந்து அமிருதசரஸ், சிம்லா ஆகிய இடங்களின் வாழ்க்கை முறைகளைத் தம் ஓவியங்களில் தீட்டலானார்.



தம் அரிய கற்பனையுடன் ஓவியங்களில் மிளிரச் செய்தவர் அம்ருதா. அவர் வரைந்த மானிட உருவங்கள் உயிர் பெற்றுள் ளவைபோல விளங்குகின்றன. புதுமுறை களைக் கையாள வேண்டும் எனத் துடிக் கும் இளம் ஓவியர்களுக்கு இவரது ஓவி யங்கள் புத்துணர்ச்சியை ஊட்டுகின் றன.



ஆனால் அவருக்கு இந் திய விமர்சகர்கள் செய்த விமர்சனங்கள் பிடிக்காமல் போனதால் அவர் ஹங் கேரிக்கே திரும்பிப்போய் அங்கு தம் உறவினர் ஒரு வரை மணந்து கொண் டார். இது 1931ல் நிகழ்ந் தது.

இதற்குப் பின் அம்ருதா ஐரோப்பிய முறையில் தம் ஓவியங்களைத் தீட்டலா னார். 1937ல் இந்தியா விற்கு வந்த அவர் இந்தியப் பாணியில் ஓவியங்களை வரையலானார். அவரது உடல்நலம் குன்றிக் கொண்டே போயிற்று. முடிவில் அவர் 1941ல் இயற்கை எய்தி னார்.

உண்மைக் காட்சிகளைத்

# உங்களுக்குத் தெரியுமா?

1. எந்த நாளை உலகச் சுற்றுப்புற சூழல்நாளாகக் கொண்டாடுகிறார்கள்?
2. நாகார்ஜுனசாகர் எந்த நதியின் குறுக்கே கட்டப்பட்டது?
3. நியூஜிலாந்தையும் டாஸ்மானியாவையும் கண்டுபிடித்தவர் யார்?
4. இங்கிலீஷ் கால்வாயை நீந்திக் கடந்த முதலாவது இந்தியர் யார்?
5. நம் புராணங்களின்படி குபேரபுரியின் பெயர் என்ன?
6. 1961 ஏப்ரல் 12; 1969 ஜுலை 21 இவற்றின் சிறப்பு என்ன?
7. பார்மோசா நாட்டின் மற்ற பெயர் என்ன?
8. ரோமானியச் சக்கரவர்த்தியிடம் ஒரு இந்தியர் சமையல்காரராக இருந்தாராம். அவர் பெயர் என்ன? எந்தச் சக்கரவர்த்தியிடம்?
9. 'சுமோ குஸ்தி' எங்கு நடைபெறுகிறது?
10. 'தமாஷா' என்ற தெருக்கூத்து எம்மாநிலத்தது?
11. மோட்டார் கார்களை மிக அதிகமாக தயாரித்த நாடு எது?
12. மிகப் பழைய இந்திய வைத்திய நூல் எது?
13. ஹோமியோபதி வைத்திய முறையை முதலில் ஆரம்பித்தவர் யார்?
14. உலகிலேயே இரண்டாவது பெரிய கடற்கரை என்று நம் நாட்டில் எங்கே உள்ளதைக் கூறுகிறார்கள்?
15. தற்கால ஒலிம்பிக் விளையாட்டுகள் முதன் முறையாக எங்கு எப்போது தொடங்கியது?
16. வடஇந்திய செஹ்னாய் இசைக் கருவியைப் போல உள்ள தென்னிந்திய இசைக் கருவி எது?

## விடைகள்

1. ஜுன் 5
2. கிருஷ்ணா நதி
3. ஏபெல்டாஸ்மன்
4. மிஹிர்சென் (1958)
5. யூரிககாரின், நீல் ஆம்ஸ்டாரங்க் சந்திர மண்டலத்தில் அடி எடுத்து வைத்த நாட்கள்
6. அளகாபுரி
7. தாய்வான்
8. ஐஸ்டினியன் கான்ஸ்டன்டைன் சக்கரவர்த்தி
9. ஜப்பான்
10. மகாராஷ்டிரம்
11. அமெரிக்கா
12. சரக சம்ஹிதை
13. ஜெர்மானியரான ஹானிமன்
14. சென்னை மெரினா கடற்கரை
15. கிரீஸிலுள்ள ஏதன்ஸ் 1896.
16. நாதஸ்வரம்.




# வேலு விரும்பியது!

வேலு என்ற இளைஞன் அழகன். வீரன் துணிச்சல் கொண்டவன். இளம்பிராயத்திலேயே அவன் தன் தாய் தந்தையர்களை இழந்து விட்டதால் தன் பாட்டியின் அரவணைப்பில் வாழ்ந்து வந்தான். பெரியவனானதும் அவன் இராணுவத்தில் சேர்ந்து நாட்டிற்குப் பணிபுரியவிரும்பினான். ஆனால் அவனது பாட்டி அதற்கு இசையாததால் அவனால் இராணுவத்தில் சேரமுடியவில்லை.

பாட்டி இறந்தபின் வேலு தான் விரும்பியபடி ராணுவத்தில் சேரத் தலைநகரை நோக்கிச் சென்றான். வழியில் ஒரு காட்டைக் கடக்க வேண்டி இருந்தது. அவன் காட்டினுள் சற்று தூரம் போனதும் ஒரு குரல் "நில்" எனவே வேலு சுற்றிலும் பார்த்தான். ஒரு மேடான இடத்தில் விகாரமான மனிதன் இருப்பதைக் கண்டான்.

அவன் வேலுவைப் பார்த்து "உன் காலின் கீழ் ஒரு கட்டெறும்பு நசுங்கி அது அழும் குரல் என் காதில் விழுகிறது" எனவே வேலுவும் காலை உயர்த்திப் பார்த்தான். அங்கு தரையில் ஒரு கட்டெறும்பு நசுங்கிக் கிடந்தது.

வேலு அந்த மனிதனிடம் "இந்தக் கட்டெறும்பு அழுதது உன் காதில் விழுந்ததா?" என்று கேட்கவே 'அவனும் "ஆமாம். என்னால் மெல்லிய ஒலியைக் கூடக் கேட்க முடியும் என் பெயர் ஒலித்தம்பி" என்றான். அப்போது வேலு "அப்படியா! இப்படி அபூர்வ சக்தி கொண்ட நீ காட்டில் ஏன் இருக்கிறாய்?" என்று கேட்டார்.

ஒலித்தம்பியும் "நான் பார்ப்

—சிவனார் செல்வன்—



பதற்கு விகாரமாக இருக்கிறேன். என்னைக் கண்டு எல்லோரும் சிரித்துக் கேலி செய்வார்கள். அதனால்தான் காட்டில் நிம்மதியாகக் காலம் கழிக்கிறேன்.'' என்றான். வேலுவோ ''இது தவறு. உன் போன்றவர்களின் பணி நாட்டிற்குத் தேவை. நான் நாட்டிற்குப் பணிபுரிய இராணுவத்தில் சேரத் தலைநகருக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். நீயும் என்னோடு வா. அங்கு நீ நன்கு வாழ வழி செய்கிறேன்'' என்றான். ஒலித்தம்பியும் அவனோடு கிளம்பினான்.

இருவரும் உச்சி வேளைக்கு ஒரு பாறையருகே போய்க் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களுக்கு தாகம் எடுத்தது. அப்போது பாறைகளிடையே இருந்த ஒரு குரல் ''வெயில் அதிகமாக இருக்கிறது. கொஞ்சம் உட்கார்ந்து இளைப்பாறிவிட்டுப் போங்கள்'' என்றது. இருவரும் ஆச்சரியப்பட்டு ஓரிடத்தில் உட்கார்ந்தனர். அப்போது ஒலித் தம்பியைவிட விகாரமாக இருந்த ஒருவன் அவர்களுக்குக் குடிக்க நீர் கொண்டு வந்து கொடுத்தான்.

அப்போது அவன் வேலுவிடம் ''உன் இடுப்பில் சொருகியுள்ள பணமுடிப்பின் முடிச்சு சற்று அவிழ்ந்திருக்கிறது. இன்னும் கொஞ்ச தூரம் நடந்தால் அது மேலும் தளர்ந்து அதிலுள்ள பணம் கீழே விழுந்துவிடும். ஜாக்கிரதை'' என்று எச்சரித்தான்.

அதுகேட்டு வேலு தன் இடுப்பிலுள்ள பணமுடிச்சைப் பார்த்தான். அதன் முடிச்சு தளர்ந்துதான் இருந்தது. துணியின் மறைவில் இருந்த பணமுடிச்சு எப்படி அந்த மனிதனுக்குத் தெரிந்தது என்று வேலுவும் ஒலித்தம்பியும் ஆச்சரியப்பட்டார்கள்.

அம் மனிதனும் ''நான் சொன்னது ஆச்சரியப்படும்படியாக இருக்கிறதா! நான் எதையும் எங்கிருந்தாலும் பார்க்க முடியும். என் பார்வையை எதுவும் தடை செய்ய முடியாது. என் பெயர்

பேரொளி'' என்றான். வேலுவும் ''நீயும் எங்களோடு தலைநகருக்கு வா உன் பணி நாட்டிற்குத் தேவை'' என்று விளக்க பேரொளி யும் சம்மதித்து அவர்களோடு கிளம்பினான்.

மூவரும் சற்று தூரம் சென் றதும் ஒரு குரல் ''நில்லுங்கள். ஒரு புலி வந்து கொண்டிருக்கிறது'' என்றது. மறு நிமிடமே ஒரு புலி உறுமிக் கொண்டு அவர்களை நோக்கிப் பாய்ந்து வந்தது. அப் போது ஒரு பாறாங்கல் வேகமாக வந்து புலியைத் தாக்கி வீழத்தவே புலி துடிதுடித்து இறந்தது.



மூவரும் தலை நிமிர்ந்து பார்க்க ஒரு சிறிய மனிதன் பாறைமீது நின்று கொண்டிருந்தான். அவனா பாறாங்கல்லை எடுத்து எறிந்த வன் என்று அவர்கள் மூவரும் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக் கையில் அந்த மனிதனே ''என் பெயர் மகா சக்தி. நான்தான் என் கண்ணை அசைத்து பாறாங் கலைப் புலிமீது விழச் செய்த வன். என் கண் அசைவால் என் னால் எதையும் நகர்த்திக் குறி யாகப் போட முடியும்'' என்றான். அப்போது வேலு அவன் பணியும் நாட்டிற்குத் தேவை என்று விளக்கி அவனையும் தன்னோடு அழைத் துக் கொண்டான்.

நால்வரும் இருட்டும் வேளைக்கு ஒரு உயரமான மலையை அணு கினார்கள். மலைமீது பழைய கோட்டை ஒன்று இருந்தது. மலை அடி வாரத்தில் இருந்த குகை யைப் பேரொளி பார்த்து ''இன் றிரவு இக்குகையில் தங்கலாம்'' என்றான். வேலுவோ ''வேண் டாம். நாம் கோட்டைக்கே போய் விடலாம்'' எனவே நால்வரும் மலைமீதேறிக் கோட்டை வாசலை அடைந்தார்கள்.

பேரொளி பார்த்து கோட்டைக் குள் நூற்றுக் கணக்கான வெள வால்கள் தொங்கிக் கொண்டி ருப்பதாகக் கூறினான். வேலு கோட்டைக் கதவை பலமாக உதைக் கவே அந்த சத்தத்தால் வெள வால்கள் பறந்தோடின. பேரொளி



கோட்டைக்குள் ஒரு கிழ ராட்சஸன் இருப்பதையும் அவன் முதுகு கூன் விழுந்திருப்பதையும் கண்டான். ராட்சஸன் மெதுவாக நடந்து வந்து கதவருகே நின்று ஒரு மாடப் பிறையிலிருந்து நீண்ட பற்களையும் கூரான நகங்களையும், உறுதியான கொம்புகளையும் எடுத்து பொருந்திக் கொண்டான். அதைப் பேரொளி மற்றவர்களிடம் கூறினான்.

இதற்குள் ராட்சஸன் "குள்ளா, அழகனே! வந்துவிட்டீர்களா?" என்று கேட்டான். வேலுவும் "கதவைத் திறவுங்கள் ராட்சஸப் பெரியாரே! உங்கள் குள்ளன் தான் எங்களை அனுப்பினார்" என்றான். ராட்சஸனும் "என் மகன் குள்ளன் எங்கே இருக்கிறான்? எப்போது வருவான்?" என்று கேள்விமேல் கேள்வியாகக் கேட்டான்.

வேலுவும் "முதலில் கதவைத் திறந்து நாங்கள் தங்க இடம் கொடுங்கள். பிறகு சாவகாசமாக எல்லாம் விவரமாகச் சொல்கிறோம்" என்றான். ராட்சஸனும் அவர்களை உள்ளே அழைத்துப் போய்ச் சாப்பிடப் பழங்களையும் பாலையும் கொடுத்தான். அவர்கள் அவற்றைச் சாப்பிட்டுவிட்டு "ஒரே களைப்பாக இருக்கிறது. எல்லாவற்றையும் விவரமாகக் காலையில் கூறுகிறோம்" எனக் கூறி ராட்சஸன் காட்டிய அறையில் படுத்துக் கொண்டார்கள்.

ராட்சஸனும் "இங்கேயே தூங்குங்கள் கோட்டைக்குள் வந்து விடாதீர்கள். வந்தால் உங்களுக்கு ஆபத்து" என எச்சரித்துவிட்டுச் சென்றான். சற்று நேரத்திற்கெல்லாம் அந்த ராட்சஸன் பலமாகக் குறட்டைவிட்டு தூங்கலானான். அப்போது ஒலித்தம்பி மற்றவர்களிடம் "இந்த ராட்சஸனின் குறட்டை ஒலியோடு ஒரு பெண் முனகும் சத்தமும் கேட்கிறது. கோட்டையின் தென்புற அறையிலிருந்து வருகிறது" என்றான்.

அப்போது வேலு "அப்படியா! நான் போய்ப் பார்த்து வரு

கிறேன்'' என்று கூறி எழுந்து சென்றான். அவன் அந்த அறையை அடைந்து சன்னல் வழியாகப் பார்த்தான். அங்கு அழகிய இளம் பெண் கண்ணீரும் கம்பலையுமாய் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவன் மெதுவாக அந்த அறைக் குள் போய் அவளருகே நின்றான். அவள் அணிந்திருந்த ஆடை ஆபரணங்களைக் கொண்டு அவள் யாரோ ஒரு அரசகுமாரி என்று தெரிந்து கொண்டான்.

அவள் வேலுவைக் கண்டு பயந்தாள். அவனோ தாழ்வான குரலில் ''பயப்படாதே. நீ யார்? உனக்கு உதவுகிறேன்'' என்றான். அவளும் ''நான் இந்த நாட்டு இளவரசி. என் பெயர் ரத்தின மாலை. நான்கு நாட்களுக்கு முன் என் தோழிகளுடன் மலைக் கோவிலுள்ள அம்பிகையை தரி சிக்கச் சென்று கொண்டிருந் தேன். அப்போது இந்த ராட் சஸன் என்னைக் கவர்ந்து வந்து இங்கே அடைத்துவிட்டான். அவ னது மகன் என்னைப் பார்த்து மணந்து கொள்ள விரும்பினா னாம். ஆனால் கிழ ராட்சஸன் தன் மகனுக்கு ஒரு ராட்சஸப் பெண்ணையே மணம் செய்து வைக்கப் போவதாகக் கூறவே அவன் கோபித்துக் கொண்டு இந்தக் கோட்டையை விட்டு எங் கேயோ போய்விட்டானாம். முடி வில் ராட்சஸன் என்னை அவனுக் குக் கல்யாணம் செய்து வைக்கத்





தீர்மானித்து என்னைக் கொண்டு வந்து இங்கே சிறை வைத்திருக்கிறான். அவன் தன் மகன் வந்ததும் என்னை அவனுக்கு மணம் செய்து வைக்கப் போகிறானாம்'' என்றான்.

வேலு அவள் கூறியதைக் கேட்டு ''பயப்படாதே. நாளை நான் இந்தச் சிறையிலிருந்து உன்னை விடுவித்துக் கோட்டைக்கு வெளியே கொண்டு போய்விட்டு விடுகிறேன்'' என்று கூறிவிட்டுத் தன் மூன்று சகாக்கள் இருந்த இடத்திற்கு வந்தான்.

காலையானதும் கிழ ராட்சஸன் நீண்ட பற்களையும் நகங்களையும் கொம்புகளையும் கூட அணிந்து கொள்ளாமல் வேலுவைக் காண வந்தான். அவனிடம் ''என் மகனைப் பற்றி விவரமாகச் சொல்'' என்று கூறினான்.

வேலுவோ ''உன் மகனுக்கு இந்நாட்டு இளவரசியைக் கல்யாணம் செய்து வைக்க மாட்டாயா? அவன் தனக்கு இந்தக் கல்யாணத்தை நீ செய்து வைக்கப் போவதில்லை என்று நினைத்து கடலில் மூழ்கி உயிர்விடப் போகிறானாம்'' என்றான்.

ராட்சஸனோ ''ஐயோ! அவனுக்கு இளவரசியைக் கல்யாணம் செய்து வைக்கத் தீர்மானித்து இளவரசியைக் கூடக் கொண்டு வந்து இங்கே சிறை வைத்திருக்கிறேனே. இப்போது என் மகன் எங்கே இருக்கிறான்?'' என்று கேட்டான்.

வேலுவும் ''மலை அடிவாரத்திலுள்ள குகையில்தான் இருக்கிறான். நீ போய் விவரமாக எல்லாவற்றையும் சொன்னால் அவன் உன்னோடு வருவான். பிறகு நீ கல்யாணம் செய்து வைக்கலாம்'' என்றான். ராட்சஸனும் ''நான் போய் அவனை இப்போதே அழைத்து வருகிறேன்'' என்று கூறி மலை அடிவாரத்திற்கு இறங்கிச் சென்றான்.

ராட்சஸன் குகைக்குள் போனதைக் கண்ட வேலு மகாசக்தியிடம் ''நீ இப்போதே நான்கு

பாறாங்கற்களைப் பார்த்து அவற்றைக் கொண்டு அந்த குகையின் வாயிலை அடைத்துவிடு'' என்றான். மகாசக்தியும் அவ்வாறே செய்ய ராட்சஸன் குகைக்குள் அடைபட்டுப் போனான்.

வேலு மூவரையும் உடனே அழைத்துக் கொண்டு இளவரசி இருந்த அறைக்குச் சென்றான். அவன் அவளிடம் இனிமேல் ராட்சஸனால் எதுவும் செய்ய முடியாது என்பதைக் கூறி, தானும் மற்றவர்களும், தலைநகருக்குப் போகும் காரணத்தையும் விளக்கினான்.

இளவரசியும் அவன் கூறியதை எல்லாம் ஆச்சரியத்தோடு கேட்டாள். அவள் ''இதெல்லாம் நான் கதைகளில் படிக்கும் ராஜகுமாரனின் வீரச் செயல்களைப் போல அல்லாவா இருக்கிறது. உங்களிடம் ஒரு அரசருக்கு இருக்கும் அறிவும் ஆற்றலும் வீரமும் துணிச்சலும் இருக்கிறதே'' என்று சிரித்துக் கொண்டே கூறினாள்.

அதன்பிறகு அவர்கள் ஐவரும் மலையிலிருந்து கீழே இறங்கி வந்தார்கள். அப்போது ஒலித் தம்பி ''நில்லுங்கள் சற்று தூரத்தில் ஒரு யானை வரும்சத்தம் கேட்கிறது'' என்றான். அப்போது பேரொளி ''அந்த யானைமீது ஒரு கிழவர் இருக்கிறார். யானையோடு பல குதிரை வீரர்களும் வந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றான்.



அப்போது ரத்தினமாலை "அப்படியானால் அவர்கள் என்னைத் தேடிக் கொண்டுதான் வருகிறார்கள். அந்தக் கிழவர் அநேகமாக அமைச்சர் ஆனந்த சிம்மராகத்தான் இருக்க வேண்டும்" என்றாள். அப்போது வேலு "அப்படியானால் நாம் இப்போதே போய் அவர்களைச் சந்திப்போம். அவர் இந் நாட்டு அமைச்சராக இருந்ததால் அவரிடம் இளவரசியை ஒப்படைத்து மன்னரிடம் சேர்ப்பிக்கும்படிக் கூறிவிட்டு நாம் நம் வேலையை கவனிப்போம்" என்றான்.

அவர்கள் சற்று தூரம் செல்வதற்குள் ஆனந்த சிம்மரே இளவரசியையும் வேலுவையும் கண்டுவிட்டார். அவர் யானை மீதிருந்து கீழே இறங்கி வேலுவை அணுகினார். வேலுவும் "நான் வேலு என்பவன். இந்த இளவரசியை ஒரு ராட்சஸன் சிறைப் பிடித்து வைத்திருந்தான். நான் இவளைக் கண்டுபிடித்து மீட்டு வந்தேன். இவளை அழைத்துக் கொண்டு போய் மன்னரிடம் ஒப்படைத்துவிடுங்கள். நானும் தலைநகருக்குத்தான் இராணுவத்தில் சேரப் போய்க் கொண்டிருக்கிறேன்" என்றார்.

அமைச்சரோ "அது எப்படி? மன்னர் இளவரசியைக் கண்டுபிடித்து மீட்டு வருபவருக்கு இளவரசியை மணம் செய்து வைத்துத் தன் நாட்டில் பாதியை அளிப்பதாக அறிவித்திருக்கிறார். எனவே நீங்களும் இளவரசியோடு வாருங்கள். உங்கள் நண்பர்களையும் அழைத்து வாருங்கள்" என்றார்.

அதுகேட்டு யாவரும் மகிழ்ந்து போனார். இளவரசியோ வெட்கத்தோடு புன்னகை புரிந்தவாறே வேலுவைப் பார்த்துக் கொண்டு நின்றாள்.






மணிப்புர நாட்டின் மன்னன் மணித்துவஜன் பலசாலி மட்டுமல்ல, சிவபக்தனும் ஆவான் பல ஹோமங்களையும் யாகங்கள் செய்து அரிய வரங்கள் பெற்றவன். தன் தலையையே கூட பல முறை வெட்டி யாககுண்டத்தில் போட்டு சிவபிரானைத் திருப்தி செய்து பல வரங்கள் பெற்றவன்.

அவன் நினைத்தால் சிவபிரானின் திரிசூலத்தையும் பாசுபதாஸ்திரத்தையும் பெற்றுக் கொள்ளவும் வரம் பெற்றான். அதுமட்டுமல்ல, அவன் விரும்பினால் சிவபிரானே வந்து உதவவும் வரம் பெற்றான். இதனால் அவனுக்கு ஒரேயடியாக மண்டைக் கர்வம் பிடித்துவிட்டது. அதனால் அவனது பேச்சிற்கு எதிர்ப் பேச்சு யாராலும் பேச முடியவில்லை.

அவன் சிவனைத்தவிர மற்ற தெய்வங்களை வழிபடுபவர்களைத் துன்புறுத்தி தன் நாட்டைவிட்டே விரட்டினான். தன் நாட்டில் சிவன் கோவில்களைத் தவிர வேறு கோவில்களே இருக்கக் கூடாது என்று உத்திரவு பிறப்பித்தான்.

மணிப்புரத்திலிருந்து துரத்தப்பட்ட மக்கள் அகதிகளாக அயோத்திக்கு வந்து குவியலானார்கள். அவர்கள் இராமரைக் கண்டு மணித்துவஜன் செய்யும் கொடுமைகளைக் கூறினார்கள். மணித்

—மணித்துவஜன் கர்வ பங்கம்—



கட்டி வைத்துவிட்டான்.

குதிரையை அவிழ்த்துவிட்டு இராமருக்கு அடி பணிய வேண்டும் எனக்கூற இலட்சுமணன் ஒரு தூதனை மணித்துவஜனிடம் அனுப்பினான். ஆனால் மணித்துவஜன் அவனை அவமானப்படுத்தி அவனது முதுகில் திரிசூல வடிவைச் சூடுபோட்டு "ராவணன் போன்ற சிவ பக்தர்களைக் கொன்ற இராமனைப் பிடித்து சிவலிங்கத்தின் முன் பலி இடப் போவதாகச் சொல். யார் என்னை எதிர்த்தாலும் அவன்முதுகில் இந்தத் திரிசூல முத்திரை பதிக்கப்படும் என்று சொல். என்னை வெல்ல யாராலும் முடியாது" எனக் கூறி அவன்மீது ஒரு கூடை திருநீற்றைக் கொட்டி அனுப்பினான்.

மணித்துவஜனோடு போர் புரிவதைத் தவிர வேறு வழி எதுவும் இல்லை என இலட்சுமணனும், பரதனும், சத்துருக்கனனும் தெரிந்து கொண்டனர். பரதன் சங்கநாதம் செய்து ஒருபுறம் தாக்க, இன்னொரு புறம் சக்கரம் போலச் சூழன்று சத்துருக்கனன் தாக்கலானன். இலட்சுமணனோ ஆதிசேஷன் சீறுவதுபோலச் சீறியவாறே பயங்கரமாக நேராகத் தாக்கினான்.

மணித்துவஜன் இந்தத் தாக்குதலைச் சமாளிக்க சிவபிரானிடம் திரிசூலத்தைக் கோரினான். அந்

துவஜனின் முடிவுகாலம் நெருங்கிவிட்டது என்றும் அவர்கள் விரைவிலேயே மணிப்புரத்திற்குத் திரும்பிப்போய் சுகவாழ்வு வாழும் காலம் வரும் என இராமர் அவர்களுக்கு ஆறுதல் கூறினார். அவர்கள் அயோத்தியில் இருக்கும் வரை எவ்விதக் குறையும் இல்லாமல் இருக்கலாம் என்றும் சொல்லி அவர் அபயம் அளித்தார்.

அசுவமேதயாகக் குதிரை பல நாடுகளிலும் எதிர்ப்பு இல்லாமல் திரிந்து மணிப்புரத்துள் நுழைந்தது. இராமரது குதிரை எனக் கண்டு மணித்துவஜன் அதனைப் பிடித்துத் தன் குதிரை லாயத்தில்

தத் திரிசூலம் கிடைத்ததும் அதை மணித்துவஜன் இலட்சுமணன் மீது எறிந்தான். அது இலட்சுமண னைத் தாக்க வந்தபோதுதான் அனு மார் வந்து நின்றார்.

அவர் பாய்ந்து வரும் திரிசூலத் தைத் தன் கையால் பிடித்து சிவ பிரானைப் போல கம்பீரமாக நின் றார். அது கண்டு சிவபிரான் தான் வந்து விட்டாரோ என நினைத்து மணித்துவஜன் அனு மாரை வணங்கினான். அவரோ சிரித்தவாறே "ஐயா சிவபக்தரே! நான் இராம பக்தன் அனுமான், வானரன்" என்று கூறி தன் கதை யைச் சுழற்றி அவனை அடிக்க லானார்.

அந்த அடியிலிருந்து தப்பி மணித்துவஜன் துள்ளிக் குதித்து ஓடினான். அனுமாரின் கோவைப் பழம் போன்ற சிவந்த கண்களை யும், தலையின் ஜடா முடிகளை யும் பார்த்து அவன் கலங்கிப் போனான். திரிசூலத்தைச் செங் குத்தாக நிறுத்தி நிற்கும் அனு மாரைத் தாக்க அவன் சிவபிரா னிடம் பாசுபதாஸ்திரத்தை கேட் டான்.

மணித்துவஜன் அந்த அஸ்தி ரத்தை எய்ததும் அப்பகுதி ஒரே வெப்பமாகியது. அதனால் இலட்சு மணனும், பரதனும் சத்துருக் கனனும் வெப்பம் தாங்க முடியா மல் தம் நினைவை இழந்து விழுந் தனர். அனுமார் இராமரின் திரு நாமத்தை உச்சரித்தவாறே தம்





அப்போது சிவலிங்கத்திலிருந்து "மணித்துவஜா! யாராலும் உன்னை வெல்ல முடியாது என்று வீராப்பு பேசினாயே! நீ அந்த இராம பக்தனை எதிர்த்துப் போராடு. உனக்குத் துணையாக நான் வருகிறேன்" என்று ஒரு குரல் ஒலித்தது.

மணித்துவஜன் போருக்குக் கிளம்பவே சிவபிரான் தன் வாகனமான நந்தி மீது ஏறி அவனோடு சென்றார். அனுமார் வந்திருப்பவர் சிவபிரான் என அறிந்தும் சற்றும் பயப்படாமல் அவரோடு போர்புரியலானார். நந்தி அவரது தாக்குதலைக் கண்டு சிவபிரானைத் தனியே விட்டுவிட்டு ஓடியது.

போர்க்களத்தில் நின்ற அனுமாரை பார்த்து "நீ விஷ்ணு பக்தன்தானே?" என்று கேட்கவே அனுமாரும் "நான் இராமரின் அடிமை. வானரமான எனக்கு அந்த இராமர்தான் கடவுள். அவரை நான் எப்போதும் நினைத்து பலம் பெறுகிறேன். அந்த சக்திதான் என்னை காக்கிறது. உலகின் நலனுக்காக மானிடரான இராமர் செய்யும் அசுவமேதயாகத்தை தடை செய்ய யாரும் முயலக் கூடாது. பரமபக்தன் எனத் தன்னைக் கூறிக் கொண்டு இந்த மணித்துவஜன் செய்வது எந்த வகையில் நியாயம்? இவனது கர்வமும்

மார்பை விரித்துக் கொண்டு பாசுபதாஸ்திரத்தைத் தாங்கிக் கொள்ள நின்றார். பாசுபதாஸ்திரம் ஈர்க்குச்சி போலாகி அவரது இதயத்துள் சென்று ஒன்றாகக் கலந்துவிட்டது.

அனுமார் மணித்துவஜனின் தேரை உடைத்து நொறுக்கினார். பின்னர் அவனை அடித்து வீழ்த்தத் தம் கதையை ஓங்கினார். மணித்துவஜன் பயந்து தப்பி ஓடித் தன் பூஜை அறைக்குள் சென்றான். அங்குள்ள சிவலிங்கத்தின் மீது அவன் தன் தலையைப் பல முறை மோதி" சம்போ மகா தேவா! விரைந்து வா" என்று கதறினான்.

சுயநலமும்தானே இவனை இப்படிச் செய்யத் தூண்டுகிறது? இவனுக்குத் துணிபுரிவது தர்மமா?'' என்று உரக்கக் கத்திக் கேட்டார்!

சிவபிரானோ உரக்கச் சிரித்து ''நீ சொல்வது எல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். இப்போது நான் நெற்றிக் கண்ணைத் திறக்கப் போகிறேன். முடிந்தால் நீ உன்னைக் காத்துக் கொள்'' என்றார். அனுமாரும் ''உம்! சீக்கிரமாகத் திறவுங்கள். அதனால் உங்களது பக்தனின் அகக்கண் திறக்கட்டும்'' என்றார்.



சிவபிரான் தன் நெற்றிக் கண்ணைத் திறக்கவே அதிலிருந்து தீப்பொறி கிளம்பி அனுமாரை அணுகியது. அவரோ தன் வலது கையை நீட்டி அதனைப் பிடித்து எடுத்து இராமரை தியானித்தவாறே தன் வாயில் போட்டு விழுங்கினார்.

அப்போது சிவபெருமான் மணித்துவஜனைப் பார்த்து ''பார்த்தாயா! இந்த அனுமார் என் அம்சம். அதனால் என் சக்தி அவனோடு சேர்ந்து அடங்கிவிட்டது. உண்மையான பக்தி என்றால் என்ன என்பதை நீ அவனிடம் கற்றுக் கொள்'' என்று கூறிவிட்டு மறைந்து போனார்.

இதற்குள் அனுமார் சட்டென துரோணகிரிக்குப் போய்ச் சஞ்சீவினி மூலிகையைக் கொண்டு வந்தார். பாசுபதாஸ்திரத்தின் வெப்பத்தால் தம் நினைவு இழந்து விழுந்து கிடக்கும் லட்சுமணன் பரதன், சத்துருக்கனன் ஆகியவர்களைச் சஞ்சீவினி கொண்டு நினைவு அடையச் செய்து எழுந்து வரச் செய்தார்.

இதை எல்லாம் கண்ட மணித்துவஜனின் அகக் கண் திறந்தது. அவன் அனுமாரின் மேன்மையை உணர்ந்து அவரைப் பணிவுடன் வணங்கினான். அனுமாரும் ''மணித்துவஜா! தன்னலமும் கர்வமும் கொண்டதால் உன் பக்தி எப்படி வீணானது என்று பார்த்தாயா? நீ உனக்காகக் கடவுளையே வேலைக்



காரனாகப் பயன்படுத்திக் கொள்வது பக்தி ஆகாது. ஜீவராசிகள் எல்லாம் சுகமாக வாழ வேண்டும் என்பதை நாம் செயலில் காட்டுவதே மேலானதாகும். உன் போன்றவர்களால்தான் மக்களிடையே கடவுள் பக்தி குறைந்து நாத்திகம் பரவுகிறது. இப்போது உன் அகக் கண் திறந்ததால் நீ கர்வத்தையும், சுயநலத்தையும் விட்டொழித்து மக்கள் நலனே முக்கியம் என்றும் எல்லாக் கடவுள்களும் ஒன்றே என்றும் உணர்ந்து உண்மையான பக்தன் என்றும் நிரூபிக்க ஆட்சிபுரிந்து வா" என்றார்.

மணித்துவஜனும் "அனுமாரே! கர்வம் மேலோங்கி நான் கேட்ட வரங்களை எல்லாம் ஏன் சிவ பெருமான் எனக்கு அளித்தார் என்பது இப்போது புரிகிறது. அசுவமேதக் குதிரையால் நான் நல்ல பாடம் கற்றுக் கொண்டேன். நானே நேரில் இராமரைக் கண்டு என் செய்கைக்கு மன்னிப்புக் கோருகிறேன். அவர் என்னையும் தன் பக்தர்களுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று வேண்டுகிறேன்." என்றான்.

மணித்துவஜன் அசுவமேத யாகக் குதிரையை விடுதலை செய்யவே அது மற்ற நாடுகளில் தங்கு தடை இல்லாமல் சென்று அயோத்தியை அடைந்தது. மணித்துவஜனும் தன் இரு மகள்களான சுபாவையும் சோபாவையும் அழைத்துக் கொண்டு அயோத்திக்குப் போனான் அங்கு அவன் இராமரை தரிசித்துத் தன்னை மன்னிக்கும்படி வேண்டினான்.

இராமர் மணித்துவஜனைத் தன் நண்பனாக வரவேற்றார். அவனும் தன் இரு மகள்களையும் லவனுக்கும் குசனுக்கும் கல்யாணம் செய்து வைப்பதாகக் கூறி இராமரது அனுமதியைக் கோரினான். இராமரும் சம்மதித்து அசுவமேத யாகம் முடிந்தபின் அவர்களது விவாகங்களை நடத்தலாம் என்று கூறினார்.

மணித்துவஜன் தன் நாட்டி

லிருந்து விரட்டியவர்களை எல்லாம் கண்டு பேசி அவர்களை மீண்டும் மணிப்புரத்திற்கே வந்து வசிக்கும்படி வேண்டினான். அசுவ மேத யாகத்தைக் காணக் கிஷ்கிந்தையிலிருந்து சுக்கிரீவன் தன் படைகளோடு வந்தான். இலங்கையிலிருந்து விபீஷணன் தன் அமைச்சர்களோடு அயோத்திக்கு வந்து சேர்ந்தான். எல்லா நாட்டு மன்னர்களும் அயோத்திக்கு வந்து சேர்ந்தார்கள்.

அவர்கள் காணிக்கையாகக் கொண்டு வந்த முத்துக்களும் மாணிக்கங்களும் வைரங்களும் தங்கமும் வெள்ளியும் அயோத்தியின் பொக்கிஷத்தில் நிரம்பி வழிந்தன. இலட்சுமணன் பரதன், சத்ருக்கனன், அனுமார் முதலியோரும் பல நாடுகளுக்கு அசுவ மேத யாகக் குதிரையின் பின் சென்றுவிட்டு அயோத்திக்குத் திரும்பி வந்தனர்.

பரத்வாஜர், கௌதமர் அத்திரி, அகத்தியர் முதலிய முனிவர்கள் யாகத்தில் கலந்து கொள்ள வந்தார்கள். அசுவமேத யாகம் நன்கு நடந்து நிறைவுற்றது. இராமர் எல்லோருக்கும் தாராளமாக தானங்களை வழங்கினார். பெண்களுக்கு ஆபரணங்களை அளித்தார். மக்களுக்குப் பணிபுரிந்தவர்களுக்கெல்லாம் பரிசுகளை அளித்து கௌரவித்தார்.

யாகம் முடிந்தபின் மணித்துவஜன் எல்லோரையும் மணிப்புரத்திற்கு வரும்படி அழைத்ததோடு யாவரையும் அழைத்துச் சென்றான். அங்கு லவனுக்கு சோபாவையும் குசனுக்கு சுபாவையும் விவாகம் செய்து வைத்தான். விவாகங்கள் சிறப்பாக நடந்தன. மணித்துவஜன் தன் நாட்டை லவனுக்கும், குசனுக்கும் கொடுத்துவிட்டுத் தவம் புரியக் காட்டிற்குச் சென்றான்.





# அறிவு வந்தது!

சிவகிரி ஜமீன்தார் மிகவும் நேர்மை யானவர். அவர் தம் ஜமீன் வேலை களைக் கவனிக்க நான்கு முக்கிய அதிகாரிகளை நியமித்திருந்தார். ஒவ்வொரு அதிகாரியின் கீழ் இருபத்தைந்து பேர் பணிபுரிந் தனர். முக்கிய அதிகாரிகள் தம் கீழ் பணிபுரிபவர்களை ஜமீன் வேலை களைச் செய்யவிடாமல் தம் சொந்த வேலைகளைச் செய்து கொள்ளப் பயன்படுத்திக் கொள்கி றார்கள் என்ற புகார் ஜமீன்தார ருக்கு வந்தது.

ஜமீன்தாரர் அதுபற்றி விசாரித்து அக் குற்றச்சாட்டில் உண்மை இருப்பதாகத் தெரிந்து கொண் டார். அந்த நான்கு அதிகாரி களையும் வேலையிலிருந்து நீக்க அவர் நினைத்துத் தம் தாயாரிடம் அதைக் கூறினார். அவளோ "அவ சரப்பட்டு எதையும் செய்யாதே. அவர்கள் நீண்டகாலமாக வேலை யில் இருப்பவர்கள். உன் தந் தையின் நம்பிக்கைக்குப் பாத்திர மானவர்கள்" என்றாள்.

ஜமீன்தாரர் சற்று யோசித் தார். உடனடியாக அவர்களை வேலையிலிருந்து நீக்காமல் அவர் களைக் கூப்பிட்டு "நம் ஜமீன் வேலைகள் எல்லாம் சுறுசுறுப் பாக நடக்கவில்லை போலிருக் கிறதே. உங்கள் கீழ் பணிபுரிபவர் கள் சரிவர வேலை செய்கிறார் களா?" என்று கேட்டார்.

அதற்கு அவர்கள் பணிவுடன் "எல்லோரும் சரியாகப் பொறுப் புடன்தான் வேலை செய்கி றார்கள். ஆனால் நாளுக்குநாள் கவனிக்கப்பட வேண்டிய விஷயங் கள் அதிகரித்துக் கொண்டே போவதால் மேலும் சிலரை வேலைக்கு அமர்த்திக் கொண்

—பாபநாசம் சாமா—



டால் எல்லா வேலைகளையும் விரைவில் செய்து முடிக்கலாம்'' என்றார்கள்.

புவனகிரியில் ஜமீன்தாரரின் தாத்தா நூறு ஏக்கர் நிலத்தில் விவசாயம் செய்து வாழ்ந்து வந்தார். அவர் பெயர் ஞானசேகரர். நல்ல அறிவாளி. அவரிடம் தம் பிரச்னையைக் கூறி யோசனை கேட்பது என முடிவு செய்து சிவகிரி ஜமீன்தாரரர் புவனகிரிக்குச் சென்றார்.

ஞானசேகரரும் ஜமீன்தாரரை வரவேற்று நலன் விசாரித்தார். ஜமீன்தாரரும் தம் பிரச்னையை அவரிடம் "இதற்கு என்ன செய்யலாம்? சில சமயங்களில் எதற்கு இந்தத் தொல்லை, சன்னியாசியாகப் போய்விடலாமா என்று நினைக்கிறேன்'' என்றார்.

அதுகேட்டு ஞானசேகரர் "மனிதன் என்றாலே பிரச்னைகள் ஏற்படத்தான் செய்யும். சன்னியாசியாகி விட்டால் மட்டும் பிரச்னை தீர்ந்துவிடுமா? எந்தப் பிரச்னையையும் சமாளிக்க வேண்டும். என் விவசாயப் பிரச்னைகளை எல்லாம் என் மகன் தீபன்தான் சமாளிக்கிறான். அவன் மிகவும் கெட்டிக்காரன்'' என்றார்.

அப்போது சிவகிரி ஜமீன்தாரர் "அப்படியானால் தீபனை என்னோடு அனுப்புங்கள். அவன் சிவகிரிக்கு வந்து என் பிரச்னைக்குத் தீர்வு காணட்டும்'' என்றான். ஞான சேகரரும் "தீபன் உன் பிரச்னைக்கு வழி காண்பான் என்ற நம்பிக்கை எனக்கு உள்ளது. ஆனால் அவனுக்கு தற்பெருமை அதிகம். அதனால் தலைகால் தெரியாமல் தான் ஒரு பெரிய மேதை என்று எண்ணித் துள்ளுகிறான். அந்தக் கர்வம் அவனைவிட்டுப் போனால் மகிழ்வேன். நான் எவ்வளவு முயன்றும் அதைப் போக்க முடியவில்லை" என்றார்.

அப்போது ஜமீன்தாரர் "உங்கள் பிரச்னை எளிதில் தீர்க்கக் கூடியதே. தீபன் என் பிரச்னைக்குத் தீர்வு காணட்டும். நான்

உங்கள் பிரச்னையைத் தீர்த்து வைக்கிறேன்'' என்றார். ஞான சேகரரும் ''உன் பிரச்னைக்கு தீபன் வழி சொல்லிவிடுவான். ஆனால் என் பிரச்னை தீருமா என்பது சந்தேகமே'' என்று கூறி னார். ஜமீன்தாரரர் எல்லாம் தீரும் என்று கூறவே ஞானசேகரும் ''நீ தீபனைக் கண்டு உன் பிரச்னை யைத் தீர்க்க உலகில் யாராலும் முடியவில்லை, அவன் ஒருவனால் தான் முடியும் என்று கூறி உன் ஊருக்கு வரும்படி அழைப்புவிடு. அவன் உன்னோடு வரச் சம்மதித் தால் தாராளமாக அழைத்துப் போ'' என்றார்.

மாலையான பிறகே தீபன் தன் வயுல் வேலைகளை முடித்து விட்டு வீட்டிற்கு வந்தான். சிவகிரி யாரும் அவனைக் கண்டு ஞான சேகரர் கூறியதுபோலவே அவனைப் புகழ்ந்துவிட்டுத் தன் பிரச்னை யைக் கூறினார். தீபன் அது கேட் டுப் பெருமிதம் அடைந்தான். அவன் அவரிடம் பல கேள்வி களைக் கேட்டு அவரது பிரச் னையைத் தெரிந்து கொண்டான்.

பிறகு தீபன் ''இந்தப் பிரச் னையைத் தீர்க்க நான் உங்க ளோடு உங்கள் ஊருக்கு வர வேண்டிய அவசியமே இல்லை. நான் சொல்கிறபடி செய்தால் உங்கள் பிரச்னை இரண்டே மாதங் களில் தீர்ந்துவிடும்'' என்றான்.

ஜமீன்தாரரும் தீபன் சொன்ன வழியை கவனமாகக் கேட்டுக்





கொண்டு தம் ஊருக்கு வந்தார். அவர் தமது நான்கு முக்கிய அதிகாரிகளை அழைத்து "நீங்கள் என் தந்தையின் காலத்திலிருந்து இங்கு வேலை பார்த்து வருகிறீர்கள். உங்களை நான் என் உடன் பிறந்த சகோதரர்கள்போல எண்ணி வருகிறேன். இப்போது நம் பொருளாதார நிலை அவ்வளவாக நன்றாக இல்லை. நம் வருமானத்தை அதிகரிக்க நீங்கள் எல்லோரும் ஒத்துழைப்பு தந்தால் நிலைமையைச் சீர்திருத்திவிடலாம். அதற்காக மேலும் சில பணியாட்களை நியமிக்க வேண்டி வந்தால் இப்படிச் செய்யவும் உங்களை அனுமதிக்கிறேன். இப்போதுள்ளவர்கள் அதிகம் என்று நீங்கள் கருதினால் அதிகமானவர்களை வேலையிலிருந்து நீக்கிவிடுகிறேன்'' என்றார்.

அவர்கள் உற்சாகமாக ஒத்துழைப்புத் தருவதாகக் கூறி மேலும் சில பணியாட்களை நியமிக்க வேண்டினார்கள். அதற்கு சிவகிரியார் "சரி. யார் எந்த வேலை செய்கிறான் என ஒரு பட்டியல் தயார் செய்யுங்கள். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பணியாளனும் தான்என்ன வேலை செய்தான் என்பதை உங்களுக்கு எழுதிக் கொடுக்க வேண்டும். அதை நீங்கள் சரி பார்த்து அவர்கள் தம் வேலையை முழுமையாகச் செய்யவில்லை என்று கண்டால் எச்சரிக்க வேண்டும். நீங்கள் கடும் நடவடிக்கை எடுக்காவிட்டால் அவர்கள் சரியாக வேலை செய்ய மாட்டார்கள்'' என்றார்.

அவர்கள் அவ்வாறே செய்வதாகக் கூறவே ஜமீன்தாரர் "இன்னொரு விஷயம். அவர்கள் தினமும் எழுதிக் கொடுக்கும் காகிதத்தில் வேலை சரியாகச் செய்தார்களா அல்லது இல்லையா என உங்கள் கைப்பட எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுங்கள். அப்போது அவர்களுக்கு உங்களிடம் பயம் இருக்கும்'' என்றார்.

அவர்கள் அதுவும் செய்வதாகக் கூறவே ஜமீன்தாரர் "இன்

ளொரு விஷயம். அவர்களுக்கு சம்பளம் அவர்களது வேலையைப் பொறுத்தேயாகும். இதை முடிவு செய்வதும் நீங்களே!'' எனவே அவர்கள் அதையும் சந்தோஷத்துடன் ஒப்புக் கொண்டார்கள். அப்போது ஜமீன்தாரர்'' சில பணியாளர்கள் உங்களை ஏமாற்ற முற்படலாம். உங்களைப் புகழ்ந்து தவறான வழியில் செல்லலாம். வேலை செய்யாமலே வேலை செய்ததாகக் கூறி உங்களைக் கையெழுத்து போடச் சொல்வார்கள். அதற்கெல்லாம் மசியாமல் அவர்கள் எழுதிக் கொடுப்பதை நீங்கள் கையெழுத்துப் போட்டு எனக்கு அனுப்புவதாகக்கூறி எனக்கு அனுப்பியும்விடுங்கள். நானும் அவற்றைப் பார்த்து திருப்தி அடைகிறேன். வேலையை சரியாகச் செய்யவில்லை என்றால் அவர்களை வேலையிலிருந்த நீக்கிவிடலாம். நீங்களும் தாட்சண்யம் காட்ட வேண்டாம்'' என்றார்.

அதுகேட்டு நான்கு அதிகாரிகளும் திகைத்துப் போனார்கள். அவர்களுக்கு ஜமீன்தாரர் என்ன நினைக்கிறார் என்பது புரிந்துவிட்டது. அதிகாரங்களைக் கொடுப்பதுபோலக் கொடுத்து முடிவில் பிடுங்கிக் கொண்டுவிட்டாரே!

அவர்களால் எதுவும் பேச முடியவில்லை. அவர் கூறுவது போல நடப்பதாகக் கூறிச் சென்



றார்கள். ஒரு மாதகாலம் ஜமீன்தாரர் கூறியபடியே நடந்தது. பணியாளர்கள் தம் வேலை போய்விடுமோ என பயந்து தினமும் தம் வேலைகளை முழுமையாகச் சரிவர செய்து குறிப்புகளை எழுதி அனுப்பினார்கள். அதிகாரிகளும் அவை சரியா, தவறா என எழுதிக் கையெழுத்திட்டு ஜமீன்தாரருக்கு அனுப்பினார்கள். ஊதியம் வேலையைப் பொறுத்தே என்றதால் அலுவலகங்கள் சுறுசுறுப்பாக இயங்க ஒவ்வொருவனும் தன் வேலையை மட்டும் செய்தான். அதிகாரிகளின் வீட்டு வேலைகளை செய்யவில்லை. ஜமீன் வேலைகளெல்லாம் சரிவர




நடந்து பண வசூலும் பாக்கி இராமல் நடைபெறலாயிற்று.

இது கண்டு சிவகிரி ஜமீன் தாரரர் மகிழ்ந்து புவனகிரிக்குப் போய் ஞானசேகரரைக் கண்டு ''தீபன் உண்மையிலேயே மேதை தான். அவனை நான் என் திவா னாக நியமித்துக் கொள்ள விரும்பு கிறேன்.'' என்றார். ஞானசேகர ரோ ''அது நடக்காது. ஏற் கனவே நான் உனக்கு தீபன் கர்வம் கொண் டவன் என்று கூறினேனே. அது நினைவில் இல்லையா?'' என் றார்.

ஜமீன்தாரரும் ''நன்றாக நினை விருக்கிறது. அதைப் போக்கவும் வழி இருக்கிறது. கனகாரண்யத் தில் கங்கா நாதர் என்ற யோகி இருக்கிறார். அவர் எல்லா சாஸ் திரங்களையும் கற்றுணர்ந்தவர். அவரிடம் தீபனை அனுப்புங்கள். தீபன் அவரோடு ஒரு வாரம் இருந் தால் திருந்துவான்'' என்றார்.

ஞானசேகரரும் ''சரி. ஆனால் தீபனை இதற்குச் சம்மதிக்க வைப் பது உன் வேலை'' என்றார். அன் றிரவு தீபன் வயலிலிருந்து வீட் டிற்கு வந்ததும் ஜமீன்தாரர் கங்காதரரைப் பற்றி அவனிடம் சொல்லி ''ஒரு யோகி என்பவர் தாம் கற்றதைப் பிறருக்கு போதிக்க வேண்டும். இந்த கங்கா நாதர் அகம்பாவம் கொண்டு யாரையும் மதியாமலும் பேசாம லும் இருக்கிறார். நீ போய் அவ ருக்கு எடுத்துச் சொல்லி அவரது போக்கை மாற்ற வேண்டும். இந்த வேலையை வேறு யாராலும் செய்யவும் முடியாது'' என்றார்.

மறுநாளே தீபன் கங்காநாத ரைப் போய்ப் பார்த்தான். அவ ருக்கு அறிவுரைகள் கூறினான். அவரும் அவன் கூறுவதைக் கேட்டு ''எனக்கு அறிவுரை கூற உனக்கு என்ன தகுதி? நான் படித்த நூல்களைக் கூறுகிறேன். அதற்குப் பிறகு நீ எனக்கு அறி வுரை கூறுவது பற்றி யோசி'' என்று கூறி நான்கு நாட்கள் தாம் படித்த சாஸ்திரங்களை எல்லாம் விளக்கிக் கூறினார்.

அவ்வளவு நூல்கள் உள்ளனவா என்று தீபன் ஆச்சரியப்பட்டான். ஆனால் அவன் "நீங்கள் எவ்வளவு படித்திருந்தாலும் ஒரு சாதாரண மனிதன் அவற்றைப் புரிந்து கொள்ளும்படி எடுத்துச் சொல்லும் சக்தி உங்களுக்குக் கிடையாது. நான் உங்களைப் போல அவ்வளவு படிக்காது போனாலும் உங்களுக்கு இல்லாத அந்த சக்தி எனக்கு இருக்கிறது" என்றான். தான் ஜமீன்தாருக்கு யோசனை கூறியதையும் வயல் வேலைகளில் தோன்றும் பிரச்னைகளைச் சமாளிப்பதையும் கூறினான்.

கங்காநாதரும் "நீ மாபெரும் மேதை என்று நீ பேசுவதிலிருந்தே தெரிந்து கொண்டேன். உலகிற்கு உன் போன்றவர்களே தேவை. என்னைப் போன்றவர்களல்ல. உன்னால் செய்ய முடிவதை நான் செய்ய முடியாததால் நான் இங்கேயே இருக்கிறேன். நீ மக்களிடையே இருந்து பெயரும் புகழும் பெறு" என்றார்.

தீபன் புவனகிரிக்கு வந்த தன் தந்தையிடமும் ஜமீன்தாரரிடமும் நடந்ததைக் கூறினான். அன்று முதல் தீபன் எல்லோரிடமும் பணிவாகப் பேசி அடக்கத்துடன் இருந்து வரலானான்.

ஞானசேகரருக்கு தீபனிடம் மாறுதல் ஏற்பட்டதற்கு என்ன காரணம் என்பது தெரிந்துவிட்டது. கங்காநாதர் தீபனைப் புகழ்வது போலப் புகழ்ந்து அவன் கற்றது மிகக் குறைவே என்பதை அவன் மனதில் பதிய வைத்துவிட்டார். முற்றும் துறந்தவர்கள் பேருக்கும் புகழுக்கும் ஆசைப்படுவதில்லை. அவர்களுக்கு உள்ள ஞானம் தனக்கு இல்லை என்பதை தீபன் அறிந்து கொண்டதாலேயே அவன் கர்வம் ஒழிந்து பணிவு அவனிடம் வந்தது.

இது கண்டு ஞானசேகரரும் ஜமீன்தாரரும் மகிழ்ந்து போனார்கள்.





# புண்ணியம் எது?

ஒரு பக்தர் திரிவேணி சங்கமத்திற்குப் போய்க் குளித்துத் தன் பாவத்தைப் போக்கிக் கொள்ள விரும்பினார். அவர் வசித்த ஊர் திரிவேணி சங்கமத்திலிருந்து வெகு தூரத்தில் இருந்ததால் அவர் தம் வயதான தாய், தந்தையர்களை உறவினர் வீட்டில் விட்டு விட்டு புனித யாத்திரை செய்யக் கிளம்பினார். அவர் பல புனித நதிகளில் நீராடிவிட்டுத் திரிவேணி சங்கமத்தை நோக்கிச் செல்லலானர். வழியில் சேவானந்தர் என்ற மாபெரும் முனிவரது ஆசிரமம் இருக்கிறது என்றும் அவரைத் தரிசித்தால் புண்ணியம் கிடைக்கும் என்றும் பலர் சொல்லவே அதைக் கேட்ட பக்தரும் அந்த முனிவரைக் காண அந்த ஆசிரமத்திற்குச் சென்றார்.

அந்த முனிவர் தவம் எதுவும் செய்யாமல் எல்லோரையும் போல வீட்டு வேலைகளைச் செய்து கொண்டிருப்பதை பக்தர் அந்த ஆசிரமத்திற்குப் போனபோது கண்டு திகைத்துப் போனார். சேவானந்தர் சமையல் செய்து விட்டுத் தம் தாய் தந்தையர்களைக் குளிப்பாட்டி சாப்பாடு போட்டு விட்டு வெளியே வந்தார். அவர் தன்னைக் காணக் காத்திருந்த பக்தரைப் பார்த்து "அப்பனே! என்னால் உனக்கு என்ன ஆக வேண்டுமோ?" என்று கேட்டார்.

பக்தரும் பணிவுடன் "மகாத்மாவே! தங்கள் புகழைக் கேட்டுத் தங்களை தரிசித்துவிட்டு திரிவேணி சங்கமத்திற்குப் போகப் போகிறேன். அது மிக அருகில்தான் இருக்கிறதாமே. அதற்குப் போக வழி சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

—கி. அருணா—

சேவானந்தரும் "என் தாய் தந்தையருக்குப் பணிவிடை செய்து கொண்டே என் காலத்தைக் கழிக்கும் எனக்கு இதுபற்றி எல்லாம் தெரியாது. நான் இந்த ஆசிரமத்தைவிட்டு எங்கு சென்றதும் இல்லை. இப்போத என் பெற்றோர்கள் சாப்பிட்டு முடித்திருப்பார்கள். அவர்களுக்குப் பணிவிடை செய்யப் போக வேண்டும்" என்று கூறிவிட்டு உள்ளே போய் விட்டார்.

அப்போது மூன்று பெண்மணிகள் கவலை தோய்ந்த முகத்துடன் அலங்கோலமாய் அந்த ஆசிரமத்தின் உள்ளே போவதை அவர் கண்டார்.

இதென்ன அதிசயம் என எண்ணி பக்தர் அங்கேயே நிற்கையில் சற்று நேரத்திற்கெல்லாம் உள்ளே சென்ற மூன்று பெண்களும் அதிரூப சுந்தரிகளாய் சிரித்த முகத்தோடு வெளியே வந்ததைக் கண்டார். அவர் ஆச்சரியத்துடன் அவர்களைப் பார்த்து "பெண்மணிகளே! நீங்களெல்லாம் யார்? இந்தக் குடிலுக்குள் போனபோது கவலையுடன் சென்றீர்களே. இப்போது திரும்பி வந்தபோது சிரித்துக் கொண்டிருக்கிறீர்களே. இது என்ன அற்புதம்?" என்று கேட்டார்.

அப்போது அம் மூன்று பெண் மணிகளும் "நாங்கள் மூவரும் சகோதரிகள். கங்கை, யமுனை சரஸ்வதி என்ற நதிகளாய் பூவுல



கில் இருக்கிறோம். திரிவேணி சங்கமத்தில் நாங்கள் மூவரும் ஒன்றாக இருக்கும்போது மக்கள் தமது பாவங்களைப் போக்கிக் கொள்ள தினமும் அச்சங்கமத்தில் நீராடுகிறார்கள். அவர்களது பாவங் கள் எங்களைப் பற்றிக் கொள்ள நாங்கள் அலங்கோலமாகிக் கவலை யுடன் தினமும் இங்கு வந்து இந்த மகானை தரிசித்து எங்களைப் பற் றிய பாவங்களைப் போக்கிக் கொண்டு மகிழ்கிறோம்" என்றார்கள்.

அது கேட்டு பக்தர் "அப்படி இவரிடம் என்ன மகிமை உள் ளது?' என்று கேட்கவே அவர் களும் "அதென்ன இப்படிக் கேட்டு விட்டீர்கள்? இவர் ஒரு விநாடி கூட வீணாக்காமல் தம் தாய் தந்தையருக்கு மிகுந்த ஈடுபாடுடன் பணிவிடை புரியும் மகான். இந் தப் புண்ணியாத்மாவை தரிசித் தாலே பாவங்கள் எல்லாம் போய் விடும். இந்த மகான் தம் நடத்தை யால் ஒருவன் தன் தாய் தந்தை யருக்குப் பணி விடை செய்வதை விட உயர்ந்த புண்ணியம் வேறெது வும் இல்லை என்று எல்லோருக் கும் அறிவுறுத்துகிறார். இவரது அறிவுரையை ஏற்று நடந்தாலே போதும், புண்ணியம் கிடைத்து விடும். கோவில் குளம் என் றெல்லாம் தீர்த்த யாத்திரை செய் யவும் போக வேண்டாம்" என்று கூறிவிட்டுச் சென்றனர்.

பக்தருக்கு அப்போது புதிய ஞானமே ஏற்பட்டது. அவர் திரி வேணி சங்கத்தில் நீராடக்கூடப் போகாமல் உடனேயே தன் ஊருக்குத் திரும்பி வந்தார். அப் போது முதல் தம் தாய், தந்தை யருக்கு இடைவிடாமல் பணி விடை புரிந்து அதுவே மாபெரும் புண்ணியம் என அவர் கருதி வரலானார்.



# இயற்கை விநோதங்கள்

## நீர் இல்லாமல் வாழும் பிராணிகள்



ஒட்டகம் பல நாட்கள் தண்ணீர் குடிக்காமல் பாலைவனத்தில் செல்லவல்லது. எனவே இதனைப் பாலைவனக் கப்பல் என்று கூறுகிறோம். இதன் முதுகுத்திமிலின் நிறைய கொழுப்புப் பொருள் சேர்கிறது. இந்தக்கொழுப்புப் பொருள் அதன் உடலுக்கு வேண்டிய சக்தியை அளிக்கிறது. ஒட்டகத்திற்கு அதிகமாக வியர்க்காது. அதனால் உடலிலுள்ள நீர் அப்படியே உள்ளது. ஆனால் இது நீர் நிலையை அடைந்ததும் ஒரே மூச்சில் 25 காலன் நீரைக் குடிக்கிறது. இது உலர்ந்த புல், சப்பாத்திக் கள்ளி ஆகியவற்றை உண்கிறது.

## இறகுகளை வாரிக் கொள்ளும் பறவைகள்

பறவைகளின் இறகுகளை நீரில் நனைத்தால் இறகுகளின் ரோமங்கள் உதிர்ந்துவிடும். ஆனால் இந்த இறகுகள் பறவையின் உடலில் இறக்கையாக இருக்கும்போது நீரில் நனைந்தாலும் ரோமங்கள் உதிரா. இதற்குக் காரணம் பறவையின் உடலின்மீதுள்ள எண்ணெய்ப் பசையே. சாதாரணமாக பறவையின் வாலின் நுனியில் எண்ணெய்ச் சுரப்பிகள் உள்ளன. பறவை தன் அலகால் இறக்கையைக் கோதும்போது இந்த எண்ணெய் வாலிலிருந்து இறகுகளில் பரவுகிறது. இதனால் பறவை நீரிலோ மழையிலோ நனைந்தாலும் இறகுகளின் ரோமங்கள் உதிர்வதில்லை. பறவை அடிக்கடி உடலை வாரிக் கொள்வதே இதற்குக் காரணம்.



## நீண்ட ஆயுள்

மொரீஷஸ் என்ற வகை ஆமை 152 ஆண்டுகள் உயிர் வாழ்கின்றது. சில 200 ஆண்டுகள்கூட வாழ்கின்றனவாம். இப்போது அமெரிக்காவிலுள்ள கரோலினா என்ற ஆமையின்வயது, 23. பாலுண்ணிப் பிராணிகளில் யானையின் வயது தான் (60-70) அதிகம். சில குதிரைகள் 50 ஆண்டு காலம் வாழ்கின்றன. சில கருடபட்சிகளும், கிளிகளும்கூட 50 ஆண்டு காலம் வாழ்கின்றன. மீன்களில் வால்காமீன் 60 ஆண்டுகளும் அமெரிக்கன் ஈல் 50 ஆண்டுகளும் உயிர் வாழ்கின்றன.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!












It's time to go back to school again. Time for text books. Time for games. Time to meet old friends. And make new ones. Time to start studying again. Because there's so much to learn about the world around you.

From all of us here at Chandamama, have a great year in school. And remember to tell us what you've learnt everyday, when you come home from school !

THE
HANDAMAMA
OLLECTION

ARTIG1246

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 ஏப்ரல் மாத இதழில் வெளியிடப்படும்**



S.G. SESHAGIRI



S.G. SESHAGIRI

* தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். * பிப்ரவரி 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
* எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. * தலைப்பு களை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## டிசம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **சோர்ந்த மனமும், தளர்ந்த நடையும்**

இரண்டாவது போட்டோ: **மலர்ந்த முகமும் மகிழ்ந்த மனமும்**

பரிசு பெற்றவர்: **எஸ். ஜெயஸ்ரீ, கல்கத்தா-26.**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

